# வைத்திய சிந்தாமணி

39

சுவடியியல் பட்ட மேற்படிப்புப் பட்டயத்திற்காக
அளிக்கப்பெற்ற பதிப்பாய்வேடு

டாக்டர் அ. வாசுகி தேவி, B.A., B.S.M.S.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113.
மே - 1991

# வைத்திய சிந்தாமணி

சுவடியியல் பட்ட மேற்படிப்புப் பட்டயத்திற்காக
அளிக்கப்பெற்ற பதிப்பாய்வேடு

டாக்டர் **அ. வாசுகி தேவி, B.A., B.S.M.S.**

**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**

சென்னை - 600 113.

மே - 1991

டாக்டர்.அ.வாசுகி தேவி, பி.ஏ., பி.எஸ்.எம்.எஸ்.,
சுவடியியல் பகுதி நேர மாணவி,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை - 600 113.

உறுதி மொழி

"வைத்திய சிந்தாமணி வெண்பா" என்னும் இப்பதிப்பாய்வேடு சுவடியியல் பட்ட மேற்படிப்புப் பட்டயத்திற்காக அளிக்கப் பெறுகிறது. இப்பதிப்பாய்வேடு என் சொந்த முயற்சியில் உருவானதேயாகும். இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிக்கும் இப்பதிப்பாய்வேடு அளிக்கப் பெறவில்லை என உறுதி அளிக்கின்றேன்.

சென்னை - 600 113.

நாள்: ௨௦. -5-1991.

( அ. வாசுகி தேவி )

டாக்டர். பூ. சுப்பிரமணியம்,
சுவடி இயல் துறை,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை - 600 113.

சான்றிதழ்

"வைத்திய சிந்தாமணி வெண்பா" என்னும் இப்பதிப்பாய்வேடு இந்நிறுவனச் சுவடியியல் மாணாக்கியர் டாக்டர் அ. வாசுகிதேவி, பி.எ., பி.எஸ். எம்.எஸ்., அவர்களின் 1989 - 1991 ஆம் ஆண்டின் சுவடி இயல் பட்டயத்திற்காக உருவாக்கப் பெற்றது எனவும், இந்த ஆய்வேட்டின் பேரில் இதுவரை இவருக்கு வேறுபட்டம் எதுவும் அளிக்கப் பெறவில்லை எனவும் சான்று வழங்குகிறேன்.

சென்னை - 600 113.

நாள்: 20-5-1991.

[signature] 20.5.91.

( பூ. சுப்பிரமணியம் )

டாக்டர் பூ. சுப்பிரமணியம்,
சுவடி இயல் துறை.
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்.
சென்னை-600 113.

# ந ன் றி யு ரை

"காலத்தால் செய்த உதவி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது"

சென்னை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில், சுவடியியல் பகுதி நேரமாகப் படிப்பதற்கு எனக்கு அனுமதி அளித்த இந்திய மருத்துவத்-துறை இயக்குநர் (முன்னாள்) மதிப்பிற்குரிய திரு இளங்கோவன், இ.ஆ.ப., அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றி.

சுவடி இயல் பட்டய வகுப்பில் சேர, சேரும் தகுதியுடையவராக என்னைத் தேர்ந்தெடுத்து, இப்பயிற்சி முடிய எல்லா வகையிலும் எனக்கு உறுதுணையாக இருந்த இந்நிறுவன இயக்குநர் வணக்கத்திற்குரிய முனைவர் சிலம்பொலி சு. செல்லப்பன் அவர்களுக்கும், பயிற்சியின் இறுதியாண்டில் தேர்வு முதலிய நிலைகளில் உதவி புரிந்த நிறுவன இயக்குநர் (பொறுப்பு) முனைவர் அன்னி தாமசு அவர்களுக்கும் நன்றி.

சுவடியியல் பயிற்சி, மொழி வரலாறு, செய்யுளியல் பாடங்களில் எனக்குப் பாடம் கற்பித்துத் தேர்ச்சி பெற வழி வகுத்துத் தந்த பேராசிரியப் பெரு மக்களுள் முதன்மையானவரான, வணக்கத்திற்குரிய, முனைவர் பூ. சுப்பிரமணியம் மற்றும் முனைவர் ச. சிவகாமி, முனைவர் சி. சவிதா, முனைவர் டி. மகாலட்சுமி ஆகியோர்க்கும் என் நன்றி.

இவ்வாய்வேட்டிற்கு அடிப்படையான சுவடியையும், துணையாக பல சுவடிகளையும், படியெடுத்துக் கொள்ளவும், ஒப்புநோக்கவும் அனுமதி அளித்து உதவிய சென்னை அரசினர் சுவடி நூலகக் காப்பாட்சியர் அவர்களுக்கும், நூலக நண்பர்களுக்கும் என் நன்றி.

இப்பதிப்பாய்வேடு உருவாக உதவிய என்னுடன் சுவடியியல் பயிற்சி பெற்ற எனது தோழி மருத்துவர் மோ.மல்லிகா, பி.எஸ்ஸி, பி.எஸ்.எம்.எஸ்., மற்றும் உடன் பயிற்சியாளரான மருத்துவர் சு.செல்வரங்கம், பி.ஐ.எம்., திரு வே.நெடுஞ்செழியன், திரு மொ.மருதமுத்து ஆகியோருக்கும் நன்றி.

இவ்வாய்வேட்டினைச் சிறந்த முறையில், குறுகிய காலத்தில் தட்டச்சு செய்து கொடுத்து உதவிய திரு கே.எஸ்.சேகர் அவர்கட்கும், தமிழாராய்ச்சி நிறுவனத்தைச் சார்ந்த அனைவருக்கும் என் நன்றிகள் உரித்தாகட்டும்.

அ. வாசுகி தேவி.

# பொருளடக்கம்

## மருந்துகள்

## கியாழம்

# கிருதம்

# பதிப்புரை

முத்தமிழ் நூல்கள், இன்று பலரால், பல்வேறு துறைகளைச்-சார்ந்தவரால், பதிப்பிக்கப்பட்டு வருகின்றன. அச்சுக்கலையின், வரவால் தினந்தோறும் வெளிவரும் நூல்கள் ஏராளம். ஆனால், அச்சுக்கலையை அறியாத காலத்தில், நம் முன்னோர்கள், இலை, தழை, கல், மரப்பட்டை, துணி, பொன்தகடு, செப்புத்தகடு, வெள்ளித்தகடு போன்ற பல்வேறு வகைப்பட்டவற்றில், தங்களுக்குத் தேவையான செய்திகளை, எழுதி வந்ததற்கு வரலாற்றுச் சான்றுகள் கிடைக்கின்றன. இவற்றைக்காட்டிலும் கையாள்வதற்கு எளிதாகவும், பொருளாதார ரீதியாகவும், பல நூற்றாண்டுகள், பழுதடையாததாகவும் இருக்க அவர்கள் ஓலைச்சுவடிகளைப்-பயன்படுத்த ஆரம்பித்தனர்.

பல்வேறு கலைகளும், தமிழ்நாட்டின் பல்வேறு பகுதிகளில் ஓலைச்சுவடியில் எழுதி வைக்கப்பட்டுள்ளன. இயற்கையாலும், செயற்கையாலும், வறுமையாலும், அறியாமையாலும், உற்றாராலும், மற்றவராலும் அழிந்தது போக, மீதி இருந்த பலவற்றில் சிலசுவடிகள் மட்டுமே தனிமனிதர்களாலும், பல நிறுவனங்களாலும் சுவடிப்பதிப்பு நூல்களாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளன. இன்னும் பதிப்பிக்கப்படாமல் முடங்கிக் கிடக்கும் சுவடி நூல்கள் ஏராளம், ஏராளம். அவற்றுள் தமிழ் மருத்துவச்சுவடிகள் முக்கியமானவையாகும். நவீன மருத்துவத்தால் சித்தமருத்துவம் விலக்கி வைக்கப்பட்டதுபோல் நம்மால் சித்த மருத்துவச் சுவடிநூல்களும் தீண்டுவாரில்லாமல் விலக்கி வைக்கப்பட்டுள்ளன. இவ்வாறு பல்வேறு காரணங்களால் அழியக்கூடிய, மறைக்கப்பட்ட, விலக்கி வைக்கப்பட்ட மருத்துவச் சுவடிகளை அழியாமல் பாதுகாப்பதன் மூலம், இன்றைய சமுதாயத்தினர்க்கு மட்டுமல்லாமல், வரக்கூடிய தலைமுறையினர்க்காகவும், பாதுகாத்துப் பதிப்பிப்பது, தமிழ் உலகுக்குச் செய்யும் தொண்டாகும்.

## ஆய்வு நோக்கம்:



சுவடிப் பதிப்புக்கலையின் முன்னோடிகளாக விளங்கிய திரு சி.வை.தாமோதரம் பிள்ளை, டாக்டர்.உ.வே.சா.திரு. எஸ்.வையாபுரிபிள்ளை போன்றோர் அச்சுக்கலை தொடங்கிய நாட்களில் தனி ஒருவராக இருந்து பதிப்புக் கலையின் வழிகாட்டியாக இருந்திருக்கின்றனர்.

தமிழ் இலக்கண, இலக்கிய நூல்களைப் பொறுத்தவரை, தமிழ் ஆர்வமுடையோரும், தனியார் நிறுவனங்களும், அரசு நிறுவனங்களும் பதிப்பித்து வருவதுபோல், இன்றைய நாளில், தமிழ் மருத்துவ நூல்களைத்– தமிழ் மருத்துவர்களாலும், மருத்துவ ஆர்வமுடையோராலும், தனியார் நிறுவனங்களும், அரசு நிறுவனங்களும் பதிர்ப்பிக்க முன்வருகின்றன.

அரசு நிறுவனங்களுள் ஒன்றான உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் ஆண்டுதோறும் சுவடிப் பதிப்புக்கலையை, முதுகலை பட்டயப்படிப்பாக நடத்தி, அதன் வழி பல சுவடி நூல்களை, ஆய்வு நோக்கில் பதிப்பித்து வருகிறது. இந்த வகையில் இந்நிறுவன சுவடிஇயல் துறைத் தலைவர் முனைவர் திரு பூ.சுப்பிரமணியம் அவர்களின் மேற்பார்வையில் 'வைத்திய சிந்தாமணி_வெண்பா' என்னும் மருத்துவச் சுவடியின் சில பகுதிகளை -- சியாழம் கிருதம் -- என்பவற்றைப் பதிப்பிப்பதே இந்த ஆய்வின் நோக்கமாகும்.

## நூலைத் தேர்ந்தெடுக்கக் காரணம்:

உடம்பால் அழியின் உயிரால் அழிவர்
திறம்பட மெய் ஞானம் சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடல் வளர்த்தோர் உயிர் வளர்த் தோரே.

-- திருமந்திரம் --

அறம், பொருள், இன்பம் என்ற மூன்றினையும் பெறுவதற்கு, ஒருவர்க்கு நோயில்லா உடல் தேவை. நோயில்லாமல் உடலைப் பேணுவதுடன், நோய் வந்தபின், நோயைத் தீர்க்க வேண்டிய வழி முறைகளை மருத்துவ நூல்கள் கூறுகின்றன.

நவீன மருத்துவம் கடந்த 200 ஆண்டுகளாகவே வளர்ந்து வந்துள்ளது. அவசரச் சிகிச்சை, அறுவை மருத்துவம் போன்றவற்றில் சிறப்புற்று விளங்கும் இம்மருத்துவம் நோய்களின் தன்மையை முற்றிலும் தீர்ப்பதாக இல்லை. நாளுக்கு நாள் மாற்றம் அடைந்துவரும் நிலையில், நவீன மருத்துவம் உள்ளது. ஆனால் இயற்கையோடு இயைந்த சித்த மருத்துவம், எக்காலத்தும் மாற்றம்பெறாத மருத்துவ உண்மைகளைக் கொண்டதாக உள்ளது.

சிந்தாமணி - எண்ணியதையெல்லாம் தரவல்லது. இதைப் போலவே, வைத்திய சிந்தாமணி வெண்பா என்னும் இந்நூலும் பல்வேறு நோய்களைக் கண்டறியக் கூடிய 'நாடி நிதானம்' பற்றிக் கூறுவதுடன் அகமருந்து, புறமருந்துகளான கியாழம், கிருதம், எண்ணெய் வகைகள், லேகிய வகைகள், பற்பம், செந்தூரம், சூரணம் முதலியவைகளைப் பற்றிய செய்முறைகளையும், அவற்றால் தீரும் நோய்களையும் கூறுவதுடன், தாதுப் பொருள்களின் சுத்தி முறைகளையும் கூறுகிறது.

மேலும் 'பா' வினத்தில் சிறந்ததான வெண்பாவால் - நான்கே அடியில் 'உள்ளங்கை நெல்லிக்கனி' போல், மருந்துகளைப் பற்றிக் கூறுவதல்லாமல், அச்சில் இதுவரை புகாததாலும், மருந்து முறைகளை அறியும் ஆர்வத்தாலும், பதிப்பாய்விற்காகவும் இந்நூல் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது.

<u>சுவடி பற்றிய செய்திகள்</u>:

இந்நூல், ஒன்று (அ) இரண்டு நூற்றாண்டுக்குட்பட்டதாகத்தான் இருக்க வேண்டும். இது பல தலைமுறைக்குப் பின் எழுதப்பட்ட சுவடியாகும். இவ்வேட்டின் மூல ஏடுகள், மிகப்பலவாக இருத்தல் வேண்டும். இவ்வேடு எழுதப்பட்டதற்குப் பல வழியேடுகள் துணைபுரிந்திருக்க வேண்டும்.

(1) இந்நூல் முழுதும் இல்லாமையே, இது 'மூலநூல்' அல்ல என்பதை நமக்கு உணர்த்தும்.

(2) இவை மற்ற மூலநூலையோ, வழிநூலையோ பார்த்து எழுதப்பட்டதாகவோ அல்லது கேட்டு எழுதப்பட்டதாகவோ இருக்கலாம். பிழைகள் காணப்படுகின்றன. சீர், தளை, அடி, பிரிப்பு இன்றி உரை நடையைப் போல் தொடர்ந்து எழுதப்பட்டுள்ளது.

<u>கிடைத்த இடம்</u>:

சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் பல்வேறு மொழிகளில் பல்லாயிரக் கணக்கான சுவடிகள் திரட்டி வைக்கப்பட்டும், திரட்டப்பட்டும், பாதுகாக்கப்பட்டும் வருகின்றன. அவற்றுள் ஆர். 2421 என்னும் எண்ணில் உள்ள தமிழ்ச் சுவடியே எனது ஆய்வுக்கான `மூல' ஏடாகக் கொள்ளப்பட்டது. இதே மாதிரியான ஆர். 948 சுவடியை துணை நூலாகக் கொண்டு ஒப்பிட்டுப் பார்த்தறிய பயன்படுத்தப்பட்டது. சுவடி பற்றி அறிய, அக அமைப்பு, புற அமைப்பு என்ற இரு பகுதிகளாகப் பிரித்துக் காணலாம்.

புற அமைப்பு:

சுவடி சற்றுப் பழமையானதாகவும், சிறிது செல்லரித்தும் உள்ளது. முன்னும் பின்னும் வேறு சில அகத்தியர் நூல்களைக்-கொண்டுள்ளது. சுவடிக்கட்டானது சட்டமிடப்பட்டுள்ளது. 320 பக்கங்களைக் கொண்டது. ஏடு எண் 125இலிருந்து நூல் தொடங்கப்பட்டுள்ளது. சுவடியின் நீளம் 32cm அகலம் 3cm ஆகும்.

அக அமைப்பு:

சுவடியின் அக அமைப்பில் பொதுவாகத் தொடக்கம், நூல் பகுதி, முடிவு என்கிற மூன்று பிரிவுகள் இடம் பெறும். இச்சுவடியைப்-பொறுத்தவரை, நூலின் தொடக்கம், நூல் பகுதியில் சில என்ற இரண்டு பகுதி மட்டுமே உள்ளது. நூலின் முடிவுப் பகுதி காணவில்லை.

நூல்:

நூலானது வெண்பாவால் இயற்றப்பட்டுள்ளது. கிடைத்துள்ள சுவடியின் இறுதிப் பகுதியில் உரைநடையில் கர்ப்பப் பெண்களுக்கான சில மருத்துவ முறைகள், 'கர்ப்ப வாலக்கிரிகை' என்ற தலைப்பில் கொடுக்கப்பட்டுள்ளது.

ஒவ்வொரு பக்கத்திலும் இடது வலது ஓரங்களில் இடம்விட்டு எழுதப்பட்டுள்ளது. ஏடுகளின் வரிசை எண், தமிழ் எண்களால் ஏட்டில் இடப்புறத்தில் தரப்பட்டுள்ளது. ஒவ்வொரு தலைப்பின் கீழும், பாடல்களின் எண்ணிக்கை கொடுக்கப்பட்டுள்ளது. இவையும் தமிழ் எண்களாகவே உள்ளது. (உ-ம்) கியாழ வகை, கிருதம், லேகியம்

போன்ற பகுதிகளில் ஒவ்வொரு மருந்தின் பாடலுக்குக் கீழும் தனி எண்கள் கொடுக்கப்பட்டு, இறுதியில் மொத்தமாக, முன் மருந்தின் எண்ணிக்கையுடன் சேர்த்து எழுதப்பட்டுள்ளது. எல்லாப் பகுதிக்குமாக தொடர் எண் கொடுக்கப்படாமல், தனித்தனியே கொடுத்து எழுதப்பட்டுள்ளது. மேலும் சில சில பகுதிக்குரிய பாடல்களின் எண்கள் தொடர்ந்தும், தொடராமலும் காணப்படுகின்றன.

## எழுத்தமைப்பு:

எழுத்துக்கள் சற்றுச் சாய்வாக, ஓரளவிற்குப் படிக்க கூடியனவாக உள்ளன. எழுத்துப் பிழைகள் மிகுதியாக உள்ளன. அடித்தல், திருத்தல்களும் காணப்படுகின்றன. இவை ஏடு எழுதுவோரால் ஏற்பட்ட பிழையே என அறிய முடிகிறது. பிழை திருத்தம், ஒற்று எழுத்து நீக்கம், ஒற்று எழுத்துச் சேர்ப்பு போன்றவற்றிற்கான சான்றுகள் சிலவற்றைப் பதிப்பில் செய்யப்பட்ட மாற்றங்களாகப் பின்வரும் பகுதியில் கொடுக்கப்பட்டுள்ளன.

"முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும்
பொன்னேபோல் போற்றுவர் பொற்புலவர் - அன்னோர்
நடையிடையத் தம்வழியே நாட்டி மொழி மாற்றல்
கடையிடையர் மாட்டுவினை காண்"(1)

என்பதிலிருந்து, முன்னோருடைய எழுத்துக்களை மாற்றம் செய்தல் தவறான காரியம் என்பதை அறியலாம். ஆனால் வழி வழியாக ஏடுகள் படியெடுக்கப்பட்டு வந்திருப்பதால் எழுத்துப் பிழைகள் ஏற்படுவது மிகச்-சாதாரணமாக ஒன்றாகும்.

'பதிப்பிக்கும் நூலைச் சிறந்த முறையில் பொருள் விளங்கிப்-பயன்படுத்தும் அளவிற்கு மக்களிடையே முழுமையாக்கித் தருவதே

பதிப்பாசிரியரின் கடமையாகும்'(1) என்னும் கொள்கையை ஏற்றுக்-கொண்டு சில எளிய சிறு சிறு திருத்தங்கள் செய்யப்பட்டுள்ளன.

சுவடியில் ஒற்றெழுத்துக்கள் புள்ளியின்றி எழுதப்பட்டுள்ளன. பொதுவாக எகர, ஒகர, உயிர்மெய்களில் குறில், நெடில் வேறுபாடு இல்லை. ஏனைய உயிர், உயிர்மெய்களில் குறில், நெடில் வேறுபாடு காணப்படுகிறது.

சில இடங்களில் ஒரே உயிர்மெய்களில் குறில், நெடில் வேறுபாடு காட்டப்பட்டுள்ளது.

(எ.கா.) ஒதுகை மொலி -- 236

ஒர் எ ஙியின் -- 116

டோமம் -- 34

ஒமம் வசம்பு -- 23

ஒற்றுகள் வரவேண்டிய இடங்களில், விடுபட்டுள்ளன.

| | | | | |
|---|---|---|---|---|
| (எ.கா.) | காம்ச்சிக் | -- | காச்சிக் | -- 4,10 |
| | குடிக்கக் | -- | குடிக்க | -- 8 |
| | சுரத்துக்குக் | -- | சுரத்துக்கு | -- 19, |
| | குழலாய்க் | -- | குழலாய் | -- 48 |

ஒரொற்று வரவேண்டிய இடத்தில் பிறிதோரொற்று வருதல்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (எ.கா.) | குமிழ் | -- | குமிள் | -- | 23 |
| | காய்க்குந் | -- | காய்க்கும் | -- | 25 |
| | மூர்ச்சைக்கு | -- | மூற்சைக்கு | -- | 98 |
| | பூவின் குடிநீர் | -- | பூவிள் குடிநீர் | -- | 133 |
| | கர்ணிகமாகு | -- | கற்ணிகமாகு | -- | 75 |

'ரகர' உயிர்மெய்க்கும் 'ர' என்ற இணை எழுத்திற்குமிடையே வரிவடிவில் வேறுபாடு காணப்படவில்லை. ஒற்றுமிகக்கூடாத இடங்களிலெல்லாம் ஒற்றுகள் மிகுந்துள்ளன. இவை பதிப்பில் நீக்கப்பட்டுள்ளன.

| | | | |
|---|---|---|---|
| விழுத | -- | விழுதத் | 7 |
| வெட்பாலி | -- | வெட்பாலித் | 13 |
| சீந்தி | -- | சீந்தில் | 27 |
| முப்பு | -- | முப்புஞ் | 54 |

'ழ - ள' வேறுபாடுகள், சில இடங்களில் சரியாகக்-காட்டப்படவில்லை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (உ-ம்) | குமிழ் | -- | குமிள் | -- | 23 |

ண - ன வேறுபாடுகள் பொதுவாக பேணப்பட்டுள்ளது. ஒரு சில இடத்தில் வேறுபாடு இல்லாமல் உள்ளது.

| | | | |
|---|---|---|---|
| கோழுணத் | -- | கோழுன | -- 132 |
| காண் | -- | கான் | -- 30 |

ன் - ள்:

| | | | |
|---|---|---|---|
| பூவின் | -- | பூவிள் | -- 133 |
| வன்சிலந்தி | -- | வள்சிலந்தி | -- 245 |

'ா' என்ற துணை எழுத்து இல்லாமல் சில இடங்களில் உள்ளது.

பேராமுட்டி -- பேரமட்டி -- 14

ந_-_ன. (உ- ம்) புக்நேத்திர -- புக்னேத்திர -- 76

ர_-_ரு கிராணி -- கிருணி -- 99

றி_-_றி

ருத்திர கிர்ச்சம் -- ருத்திர கிறிச்சத்துக்கு-- 138

சுவடியில் காணப்பெறும் பிழைகளும் திருத்தங்களும்:

எழுத்துப்பிழைகளன்றி, வேறு சில பிழைகளும் எடெடுதவோரால் நிகழ்ந்துள்ளன. அவை:

(1) பிழையாக எழுதப்பட்ட எழுத்துக்களும், சொற்களும் அடிக்கப்பட்டுள்ளதைத் தொடர்ந்து எழுதப்பட்டுள்ளது.

(2) சில இடங்களில் அடிக்கப்பட்ட இடத்தில் நேர் மேலே எழுதப்பட்டுள்ளது.

(3) விடுபட்ட எழுத்துக்கள் அவ்வவ் இடங்களுக்கு மேல் பகுதியில் எழுதப்பட்டுள்ளது.

அடிக்கப்பட்டுள்ளதைத் தொடர்ந்து எழுதியிருத்தல்:

(எ.கா.) திரிகடுகுபலிகள் -- 6

தருண் இடிகில் -- 6

திரிகடுகுகோடே --72

மஞ் நன்னாரி --121

போஞ் நீ தோற்ற--130

அடிக்கப்பட்ட இடத்தின் மேலே திருத்தம் செய்திருப்பது:

வேதாலம் -- 7

திரிகடுகோ -- 34

மிரிவன்னி -- 68

விடுபட்ட எழுத்துக்களை அவ்வவ் இடங்களுக்கு நேர் மேலே எழுதியிருத்தல்:

கரிந்த குடிநீர் -- 7

சேர்ந்த -- 110

முடிவு:

சுவடி முழுமையாக இல்லாததால், யாரால், எப்போது எழுதப்பட்டது என்ற செய்திகள் கிடைக்கவில்லை.

பதிப்பாய்வின் போது செய்யப்பட்ட ஒழுங்குகள்:

செய்யுட்களின் அடி, சீர்கள் பிரிக்கப்பட்டு உரிய வடிவில் கொடுக்கப்பட்டுள்ளது. சீர்களும், பூச்சி அரிப்பால் விடுபட்ட எழுத்துக்களும் தனைச் சுவடியுடன் ஒப்பிட்டு எழுதப்பட்டுள்ளன. விடுபட்ட 3 ற்றுகள், சில சொற்கள், ஆய்வாளரின் உய்த்துணர்வால் மீட்டுருவாக்கம் செய்யப்பட்டும் உள்ளன.

உட்தலைப்புகள் - பாடலின் ஆரம்பத்திலும், ஏட்டின் இடது புறத்திலும் தரப்பட்டுள்ளன. இரண்டும் சரிபார்க்கப்பட்டு எழுதப்பட்டுள்ளன.

உட்தலைப்பு கொடுக்கப்படாத சில இடத்தில் மட்டும் பதிப்பாசிரியரால் பாடலின் பொருளினால் தலைப்புகள் தரப்பட்டுள்ளன.

பாடல் எண்கள் தமிழில் இருப்பதை மாற்றி ஆங்கில எண் கொடுக்கப்பட்டுள்ளது.

எகர, ஏகரக், குறில், நெடிகள் வேறுபடுத்தப்படாத இடங்களில் வேறுபடுத்தி எழுதப்பட்டுள்ளது.

மெய்யெழுத்துக்கள் புள்ளியிடப்பட்டுள்ளன.

ஒற்று மிகக் கூடாத இடங்களில் அவை நீக்கப்பட்டுள்ளன.

தேவையான இடங்களில் ஒற்று சேர்க்கப்பட்டு (காய்ச்சக) தரப்பட்டுள்ளது.

எதுகை, மோனைகள் பாடலின் இடம் நோக்கி, ஒரு சில இடங்களில் திருத்தப்பட்டுள்ளன.

கிருதம், தைலம் போன்ற பகுதிகளில், ஒவ்வொரு மருந்தின், பெயர் முன் `வேறு' என்று எழுதப்பட்டுள்ளது. ஆனால் கியாழம் போன்றவற்றில் இவ்வாறு கூறப்படவில்லை. ஆகவே பதிப்பில் `வேறு' என்ற சொல் நீக்கப்பட்டு, ஒரே மாதிரியான மருந்துகளுக்கு மட்டும் வேறு – என்று பதிப்பில் குறிப்பிடப்படுகிறது.

(எ.கா.) வாசாதி கிருதம்

(வேறு) வாசாதி கிருதம்

இணைப்பாக, தாது, தாவர, சங்கமப் பட்டியலும், பாட்டு முதற்குறிப்புப் பட்டியல், அளவுகள், சிந்தாமணி நூல்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

## ஆய்வுரை

தமிழர் நாகரீகம் பண்பட்ட நாகரீகமாகும். ஐரோப்பிய நாடுகள் அவ்வளவாக நாகரீக வளர்ச்சி அடையாத நிலையில், தமிழர்கள் ஆய கலைகள் அறுபத்து நான்கிலும், வல்லமை பெற்றிருந்தனர். அவற்றுள் தமிழ் மருத்துவக்கலை மிகவும் வளர்ந்த நிலையில் இயற்கையோடு பின்னிப்-பிணைந்து காணப்படுகிறது.

### தமிழின் தோற்றம்:

தமிழ்மொழியின் தோற்றம் பற்றி உண்மையினைச் சரிவர நம்மால் அறிய முடியவில்லை. அகத்தியர், சிவபெருமானின் கட்டளைப்படி தமிழைத் தென்பொதிகை மலையில் தங்கி வளர்த்தார் என்றும், தமிழில் முதன்முதலாக 'அகத்தியம்' என்னும் இலக்கண நூலை எழுதினார் என்றும் அறிகிறோம்.

வடமொழியில் வியாசபகவானை முதன்மையாகக் கொள்வது போல், அகத்தியரை முதன்மையாளராகக் கொள்கிறோம். இதனாலே இவரை 'தமிழ் முனி', 'தமிழ் துறவி' என்று அழைக்கப்படுகிறது. 'அகஸ்தீஸ்வர்' என்ற பெயரால் இவர் தென்பகுதியில் வழிபடப்பட்டு வருகிறார். இன்றும், 'அகஸ்தியர் மலைகளில்' இவர் வாழ்ந்து வருவதாக ஐதீகம் உள்ளது.

"தமிழ்மொழி, சிறப்பாகப் பண்பட்ட மொழியாகும். மேலும், இந்திய இலக்கியங்களின் களஞ்சியமாகவும் விளங்குகிறது" என்ற புரபஸர், மாக்ஸ் முல்லரின் கூற்றால் தமிழர் மட்டும் அன்றி மற்ற நாட்டவரும் தமிழின் பண்பட்ட நிலையைப் போற்றி உள்ளனர்.

மருத்துவம்:

மருத்துவம் என்பது, அறிவியல் மட்டுமல்லாமல் ஒரு சிறந்த கலையாகவும் உள்ளது. மருந்து மாத்திரைகளை தயாரிப்பது, பயன்படுத்துவது, அதனால் தீரும் நோய்களைக் குறிப்பிடுவது மட்டுமல்லாமல், மனிதனுடைய பல்வேறு வாழ்க்கை முறை பற்றியும் அறிய உதவுகிறது.

இந்தியாவில் காணப்படும் மருத்துவ முறைகள் மூன்றாகும்.

1) ஆயுர்வேதம்

2) யூனானி

3) சித்த மருத்துவம்.

இதனுடன், அல்லோபதி, ஹோமியோபதி என்ற மருத்துவ முறைகளும் உள்ளன. முதலில் குறிப்பிட்ட மூன்று மருத்துவங்களும், அடிப்படையில் ஒன்றுபட்ட தன்மைகளைக் கொண்டுள்ளன. 'திரிதோடத்' தத்துவமே இம்மூன்றின் அடிப்படையாக உள்ளது. வாத, பித்த, கபம் என்னும் இம்மூன்றும் உடலைப் பாதுகாத்து நன்னிலையில் வைக்கின்றன. இவை தம் நிலையில் மாற்றம் அடையும் போது, 'நோய்' ஏற்படுகிறது.

ஆயுர்வேதம்:

ஆயுர்வேதம் நான்கு வேதங்களில் ஒன்றான அதர்வண வேதத்தின் ஒரு பகுதியாகும். ஆரியர்கள் இதைத் தங்களுக்குச் சொந்தமானது என்ற போதிலும், இதனுடைய தோற்றம், காலம் பற்றிய உண்மைகள் சரிவர கிடைக்கவில்லை.

சிலர் பிரம்மா இதை இயற்றியதாகவும், மற்றும் சிலர் சிவனால் படைக்கப்பட்டதாகவும் கூறுவர். இதன் காலம் 9 (அ) 10ஆம் நூற்றாண்டாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது. சரகர், சுஸ்ருதரின் மருத்துவ, அறுவை மருத்துவ நூல்கள், ஆயுர்வேதத்தில் முக்கியமானவையாகும்.

ஆயுர்வேதம் என்னும் சொல்லிற்கு மருத்துவக்கலை என்றே தமிழ் அகராதிகள் குறிப்பிடுகின்றன. ஆயுளை வளர்த்துக் கொள்ள வழிகாட்டும் மருத்துவ சாஸ்திரம் ஆயுர்வேதம் எனப்பட்டது. தமிழ் மருத்துவ முறைகளை நோக்கச் சித்த மருத்துவமே மிகப் பழமை வாய்ந்தது என்றும், அதனைப் பின்பற்றி எளிய முறையில் உருவாக்கப்பட்டதே ஆயுர்வேதம் என்பதும், பரந்துபட்ட கருத்துக்களாக விளங்குகின்றன. இரண்டு மருத்துவமும் ஒன்றுடன் ஒன்று பின்னிப் பிணைந்ததாகவே உள்ளன.

இம்மருத்துவம் சில தெளிவான முறைகளை உடையதாக உள்ளது. இம்முறை எட்டுவிதமான மருத்துவ பெரும் பிரிவுகளால் அமைகிறது. அவை:

1. சல்லியம் -- சாஸ்திரிகம்
2. ஊர்த்துவாங்க சலக்கியம்
3. காய சிகிச்சை
4. பூதவரித்தயம்
5. கௌமார பிரத்தியம்
6. இரசாயன தந்திரம்
7. ஆக தந்திரம்
8. வசீகரண தந்திரம்

இவ்வாறாகப் பல பிரிவுகளாக உள்ள ஆயுர்வேதம் தமிழ் மருத்துவத்தில் ஒன்றாக இணைந்துவிட்டது. தமிழ் மருத்துவம் என்றாலே, சித்தம், ஆயுர்வேதம் ஆகிய இரண்டையும் குறிக்கும் நிலையில் ஒன்றிவிட்டன எனக் கூறலாம்.

யூனானி:

அராபியர்கள், வெகு காலத்திற்கு முன்பே, அறிவியல் மருத்துவத் துறையைப் பற்றி அறிந்திருந்தனர். அராபிய எழுத்தாளர்கள் (கி.பி.4 - 8 ஆம் நூற்றாண்டு) இந்தியாவிற்கு வருகை தந்த இந்திய படைப்புக்களை, அவர்கள் நாட்டிற்குக் கொண்டு சென்று, அதை பாரசீக மொழியில் எழுதினர். இவர்கள் இவ்வாறு எழுதியவற்றுள், 'மருத்துவம்' முக்கியமானதாகும்.

"Prof. -- Wilson -- is of the opinion that they followed, the Hindu Works, on Medicine more closely rather than of the early Greeks."

என்பதிலிருந்து, அராபியர்கள், இந்திய மருத்துவ முறையைப் பின்பற்றியதை அறியலாம்.

முகமதியரின் வருகையால் இம்மருத்துவமும் நம் நாட்டில் பரவிற்று. இம்முறையில், உயிரினங்களின் தசைச் சத்துகள், தாவர இனங்களின் வித்துகள், மிகுதியாக இடம் பெறுகின்றன.

அலோபதி:

இது கடந்த 200 ஆண்டுகளாக, மிகவும் விரைவாக வளர்ந்த மருத்துவமாகும். சித்த - ஆயுர்வேத மருத்துவ முறைகளைப் பின் தள்ளிய வலிமை அலோபதிக்கே உரியதாகும். அவசரச் சிகிச்சை, மற்றும் அறுவை மருத்துவத்திற்கு மிகவும் ஏற்றதாகவும் உயர்ந்த வளர்ச்சியை உடையதாகவும் இத்துறைகளில் காணப்படுகிறது. ஆனால் இம்மருத்துவ முறையில் நோயின் தன்மை, அடியோடு அகற்றப்படுவதில்லை.

ஓமியோபதி:

இம்மருத்துவம், ஜெர்மானியில் தோன்றியதாகும். இது ஒரு கலப்பு முறை மருத்துவமாகும். இந்தியா முழுவதும், இம்மருத்துவம் பயன்படுத்தப்பட்டு வருகிறது.

சித்த மருத்துவம்:

சித்த மருத்துவம் தமிழர்களுடைய மருத்துவமாகும். இம்மருத்துவம் தூல தேகத்தைப் பற்றிக் கூறுவதுடன், சூக்கும தேகத்தைப் பற்றியும் கூறுகிறது. மனிதன் எப்படி இயற்கையோடு சார்ந்து வாழவேண்டும் என்பதுடன், மரணமில்லாப் பெரு வாழ்வு வாழ்வதைப் பற்றியும் கூறுகிறது.

சித்த மருத்துவம் சமயச்சார்புடையதாகும். இம்மருத்துவத்தை மருத்துவ முறை என்று கூறுவதைக் காட்டிலும், வாழ்வு நெறி முறை என்று கூறினும் பொருத்தமாகும். நோயின்றி வாழும் முறை, ( Prevention ) நோய் வந்த பின் தீர்க்கும் வழி ( Therepheutic) நோய் தடுப்பாற்றல் ( Immunity ) போன்றவற்றைத் தெளிவாகக் கூறுவதே சித்த மருத்துவம். இவை மட்டுமன்றி அறுவை மருத்துவம் ( Surgery ) காயகல்பம் ( Rejunation ) போன்றவற்றைப் பற்றியும் கூறுகிறது. வருமுன் காப்பது நன்று என்னும் உண்மை இம்மருத்துவத்திற்கே உரியதாகும்.

சித்தர்கள்:

சித்தர்கள் என்பதற்குச் சித்தி அல்லது முக்தி அடைந்தவர்கள் என்று பொருள்படும். சித்தி என்பது எண்வகைச் சித்திகளைக் குறிக்கும். இவை அணிமா, மகிமா . . . போன்ற எண் வகைகளாகும்.

சித்தர்கள் மெய்ஞானிகளாக மட்டுமல்லாமல் சிறந்த விஞ்ஞானிகளாகவும், சீர்திருத்தக்காரர்களாகவும் இருந்து உள்ளனர். இன்றைய விஞ்ஞானிகளால் ஆய்வுக் கருவிகள் கொண்டு, ஆய்வு சாலையில் கண்டுபிடிக்க முடியாத பல உயரிய மருந்துகளை, மருத்துவ முறைகளை அவர்கள் நமக்குக் கொடுத்துள்ளனர். நமக்கு, இவற்றை அறிய முடியாத காரணத்தால், இவை போன்று இருக்க முடியுமா என ஐயுருகிறோம்.

<u>சித்தர் காலம்</u>:

சித்தர்கள் காலத்தைப் பற்றி சரிவர நிர்ணயிக்க முடியவில்லை. வரலாறு, இயற்கைச் செயற்கைச் சக்திகளால் அழிவுற்றதே காரணமாகும்.

சித்தர்களில் அகத்தியர் முதன்மையானவராகவும், இவர் மருத்துவம், அறுவை மருத்துவம், இரசவாதம், ஜாலம், மந்திரம் முதலிய நூல்களை எழுதியுள்ளதாகவும் தெரிய வருகிறது.

<u>சித்த மருத்துவ வரலாறு</u>:

சித்த மருத்துவம், பரமசிவனால், நந்திக்கும், நந்தியிடம் இருந்து அகத்தியர், புலத்தியர் முதலான சித்தர்களுக்குக் கூறப்பட்டதாகவும் கருதப்படுகிறது.

சித்தர் நூல்கள் மருத்துவம் ( Medicine ) இயற்கை பற்றிய உண்மை அறிவு ( Natures Law ) வான இயல் ( Astronomy ) இரசவாதம் ( Alchemy ) காயகல்பம் ( Medicine for the strengthening the body [(or) Rejuvenation] ) அணுக்கொள்கை ( Atomic theory ) சோதிடம் ( Astrology ) போன்ற பல்வேறு துறைகளைப் பற்றிக் கூறுகிறது.

நந்தி, புஜண்டர், கௌசிகர் முதலியோரால் இயற்றப்பட்ட சோதிடம், வான சாஸ்திரம் இன்றும் வியக்கத்தக்கதாக உள்ளது.

ராம தேர், ரோமரிஷி, போன்ற சித்தர்கள் கருக்கி, அரேபியா, திபெத், சைனா, சிலோன் போன்ற இடங்கட்கு சென்று அங்கு மருத்துவ முறையை பரப்பினர் என்று வரலாற்றுச் செய்திகள் கிடைக்கின்றன.

**இலக்கியமும், மருத்துவமும்:**

தமிழ் இலக்கியங்களிலும், மருத்துவ சம்பந்தமான குறிப்புக்கள் காணப்படுகின்றன.

**சிறுபஞ்சமூலம்:**

பதினெண் கீழ்கணக்கு நூல்களில் ஒன்றான இதில் 5 நாட்பட்ட வியாதிகள் குறிப்பிடப்படுகிறது.

1. நாட்பட்ட தலைவலி (Migraine)
2. மனநோய் (Mental Illness)
3. காசம் (T.B.)
4. வாய்ப்புற்று (Oral Cancer)
5. மூலம் (Piles)

'சிக்கர் சிதடர் சிதலைபோல் வாயுடையார்' என்பது கூற்றாகும். சிதலைபோல் -- எறும்புப் புற்று இதிலிருந்தே அக்காலத்தே தமிழர் புற்று நோயைப் பற்றி அறிந்திருந்தனர் என அறிய முடிகிறது.

ஏலாதி எனப்படும் மற்றொரு தமிழ் நூலில், அதிக தீங்கு பயக்காத கழலை (Benign type Tumer ) பற்றி 'பெரும் சிரங்கு' (காய்ந்த இடர் செய்யும் கழலை) என்று குறிப்பிடப்படுகிறது.

கருஞ்சிரங்கு வெண்டொழு நோய் கல்வளிகாயும்
பெருஞ்சிரங்கு பேர் . . . .

இவ்வாறு இலக்கியங்களிலும், மருத்துவத்தை அறிய முடிகிறது.

<u>நோய் காரணம்</u>:

1. உணவாதி செயல்களால், முத்தோடங்களில் மாற்றம் ஏற்பட்டு நோய் ஏற்படுகிறது.

2. 'அண்டத்திலுள்ளதே பண்டம்
பிண்டத்திலுள்ளதே அண்டம்'
(சட்டமுனி ஞானம்)

என்னும் கூற்றிற்கு ஏற்ப அண்டத்தில் ஏற்படும் மாற்றத்தால் நோய்கள் உண்டாகின்றன.

(எ.கா.) கிரகதோடம் Planetary changes

3. மற்றவர்கள் (நோயில்லோர்) தொடுவதால் தோடம் ஏற்படல் ( Due to Infection)

4. நச்சுப் பொருட்கள் (Pois onous Substance)

5. தெய்வாதீனமான சக்தியாலும் (Spritual Causes or Spritual)

6. கர்மவினையாலும், 7. குணநல மனமாறுபாடுகளாலும்

நோய்கள் உண்டாகும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

சித்த மருத்துவச் சிறப்புகள்:

1) நாடி பார்த்து நோய் அறியும் தன்மை சித்த மருத்துவத்திற்கே உரியதாகும்.

2) சூதகந்தி தாசபற்பஞ் சொன்னநாட் டார்சிகிச்சை
ஓதரிய முலியினமன் னோர்ச்சிகிட்சை - வேதடரும்
சத்திசா ராக்கினிநி சாசரச்சி கிச்சையென்றே
முத்தரத்த தாகும் மொழி

(ப.கு.சி.)

என, தேவர்கள் எவ்வாறு பெருமை வாய்ந்தவர்களோ, அத்தகைய பெருமை உடையது சித்த மருத்துவம் என அறிய முடிகிறது.

3) இரசவாதம் பற்றிய உண்மைகள், சித்த மருத்துவத்திலே மிகுதியாக இருப்பதை அறிகிறோம்.

4) அப்பிரகம் போன்றவற்றை சித்த முறையில் 100 தடவை புடத்திலே, பற்பமாக்க முடியும். ஆனால் ஆயுர்வேதத்தில் இவ்வாறு செய்ய முடியாது.

5) சித்த மருத்துவம் ஆயுர்வேதத்திற்கும் காலத்தால் முந்தியது.

6) உலோக, பாடாணம் போன்ற உயர்ந்த மருந்துகள் சித்த மருத்துவத்திலே அதிகமாக பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

டாக்டர் எ.லட்சுமிபதி, ஆந்திர பிரதேசம், ஆயுர்வேத போர்டின் தலைவர் கோயமுத்தூரில், 10-ந் தேதி ஜீலை, 1959இல் நடந்த சித்த மருத்துவ மாநாட்டில் தலைமை உரையாற்றும்போது,

'தென்னிந்தியாவில் சித்த மருத்துவம் மற்ற மருத்துவத்துறைகளுக்கு முன்பே சிறப்புற்றிருந்தது என்பதை மிக எளிதாக நம்பலாம்; ஏனெனில், தென்னிந்திய தீபகற்பமானது மனித இனத்தின் தொட்டிலாக கருதப்படுகிறது' என்று கூறியுள்ளார்.

"இந்திய மருத்துவர்கள் தான் முதன் முதலில் நோய்களைப்-பற்றி படிப்பதிலும், அவற்றை குணப்படுத்துவதிலும், கவனம்செலுத்தினார்கள். மருத்துவத்தில் அவர்கள் பெற்றிருந்த அறிவு பலவழிகளிலும் இக்காலப்பிற மருத்துவங்களை விட முற்பட்டது. அவற்றை - இயற்கையை - தீவிரமாகக் கற்று ஆராய்ந்து, இந்த மண்ணின் சொத்தாகக்-கொடுத்துள்ளார்கள். உதாரணமாக, ஆஸ்த்துமாவிற்கு ஊமத்தை இலையைப் புகைப் பிடிக்கச் செய்வதும், எட்டியைப் பக்கவாதத்திற்கும், குன்மத்திற்கும் பயன்படுத்துவதும், நாம் இந்தியாவிற்கு கடமைப்பட்டிருக்கிறோம். நஞ்சு இயலில் அவர்கள் மிகவும் திறமையுடையவர்கள். பாம்புக்கடிக்குக்-கிரேக்க மருத்துவர்களால் மருத்துவம் செய்ய இயலாதபொழுது அவர்கள் அத்துன்பத்தால் பாதிக்கப்பட்டவர்களை எளிதில் குணப்படுத்தினர். பழங்கால இந்துக்களின் தாது, தாவர, சங்கம பொருட்களின் அறிவு இன்றைய அறிவியல் ஆராய்ச்சியாளர்களுக்குச் சிறப்பானதாக உள்ளது. பிறகு அது தான் கிரேக்கர்களாலும், ரோமானியர்களாலும், இந்தியர்களிடம் இருந்து இரவல் வாங்கப்பட்டது, என்பதை யாராலும் மறுக்க முடியாது. இந்திய மருத்துவ முறை இன்றும் வாழ்ந்து வரும் மருத்துவமாகும். கோடிக்கணக்கான இந்தியர்கள் இம்மருத்துவ முறையில் குணப்படுத்தப்-படுகிறார்கள். இவ்வாறாகப் பல நூற்றாண்டுகளாக வாழ்ந்து வரும்

ஒரு மருத்துவ முறையை, விஞ்ஞான பூர்வமற்றது என்று எளிதில் விளக்கி வைக்க முடியாது என்று ராம் குறிப்பிட்டுள்ளார்.

<u>சித்த மருத்துவச் சிறப்பு குன்றக் காரணங்கள்:</u>

சிறப்புற்றிருந்த சித்த மருத்துவம், ஆரியர் வரவாலும், வடமொழி தாக்கத்தாலும், தனது வீழ்ச்சியின் தொடக்கத்தைக் கண்டது. பின்வந்த முகமதியர், அந்நியர்களால் மேலும் தன் சிறப்பினை இழந்தது. நவீன மருத்துவத்தின் வளர்ச்சியாலும், மோகத்தாலும், பின்னுக்குத் தள்ளப்பட்டது.

1) சித்தர்கள் அரிய மருந்து முறைகளைப் பூடகமாக மறைத்து வைத்தனர். அவர்கள் பரிபாஷைச் சொற்களைப் பயன்படுத்தினர். இதனால் ஒரு சிலரால் மட்டுமே அல்லது ஒரு குழுவால் மட்டுமே அறிய முடியும்.

| | | | |
|---|---|---|---|
| (உ.ம்) | தாயைக் கொன்றான் | -- | வாழை |
| | பூனை வணங்கி | -- | குப்பைமேனி |
| | யானை வணங்கி | -- | நெருஞ்சில் |
| | இரு குரங்கின் கை | -- | முசுமுசுக்கை |

2) மேலும், மருத்துவ நூல்கள் எல்லாம், செய்யுள் வடிவிலே எழுதப்பட்டுள்ளது. எதுகை, மோனை போன்ற பாட்டமைப்பிற்காக அமைக்கப்பட்ட சொற்கள், பொருள் குறிப்பதில் மயக்கத்தை உண்டாக்கியது.

3) நோயாளியின் மனநலம் கருதி எளிய மூலிகைகளும், வைத்தியர்களால் மறைக்கப்பட்டன.

## சித்த மருத்துவ முறை:

சித்த மருத்துவ முறை 3 வகைப்படும். அவை:

1. தேவ மருத்துவம்.
2. மானிட மருத்துவம்.
3. அசுர மருத்துவம் ஆகும்.

## தேவ மருத்துவம்:

மிக உயர்ந்த மருந்துகளான, சுண்ணம், பற்பம், செந்தூரம், களங்கு, கட்டு மாத்திரை, மெழுகு முதலியவற்றைக் கொண்டு செய்யும் மருத்துவமாகும்.

## மனித மருத்துவம்:

தாவரங்களைக் கொண்டு செய்யப்பட்ட குடிநீர், சூரணம், சுரசம், பிட்டு, வடகம், இளகம், மணப்பாகு, மாத்திரை முதலியவைகளைக் கொண்டு செய்தல்.

## அசுர மருத்துவம்:

மருந்தால் தீராததை, அறுவை, கீறல், சுட்டிகை, அட்டைவிடல், குருதிவாங்கல், சலாகை, கொம்புகட்டல் முதலியவற்றால் பிணிகளைக்-குணப்படுதல் என்று 3 வகை முறைகளை அறிகிறோம்.

## மருந்து:

இது அகமருந்து, புறமருந்து என இரண்டு வகைப்படும்.

| | |
|---|---|
| அகமருந்து | 32 |
| புற மருந்து | 32 |

அகமருந்து 32ம் அவற்றின் ஆயுள்காலமும்:

"உள்மருந் தேசுரசஞ் சாறுகுடி நீர்கற்க
    முக்களி யடையோர் சாமம்
உயர்சூர ணம்பிட்டு வடகம்வெண் ணெய்நால்கி
    ழயிர்மூன்று திங்க ளாகும்
வின்மணப் பாகுநெய் ரசாயன மிளகாகவும்
    மேவுமறு திங்க ளெண்ணெய்
விரவிடு முயர்ந்தமாத் திரைகடுகு பக்குவம்
    மிளிர்தேனி னூறல் தீநீர்
கொள்ளாறு மோராண்டு மெழுகொடு குழம்பைந்து
    கோப்பதங் கம்பத் ததாம்
குருதிபொடி வெழுபாறொ டைந்தாண்டு நீறுகட்
    டுருக்குக் களங்கு நாறு
றெள்ளிடாச் சுண்ணமைந் நூ றுகற் பஞ்சத்து
    குருகுளிகை மிக்கா யுளென்
றெவரு மகிழ் சித்தர்முப் பத்திரண் டகமருந்
    திசைத்தவா யுள்ள ளவரோ"

<u>புறமருந்துகள் (32)</u>:

1. கட்டுதல்
2. பற்று
3. ஒற்றடம்
4. பூச்சு
5. வேது
6. பொட்டணம்
7. தொக்கணம்
8. புகை
9. மை
10. பொடி திமிர்த்தல்
11. கலிக்கம்
12. நசியம்
13. ஊதல்
14. நாசிகாபரணம்
15. களிம்பு
16. சீலை
17. நீர்
18. வர்த்தி
19. சுட்டிகை
20. சலாகை
21. பசை
22. களி
23. பொடி
24. முறிச்சல்
25. கீறல்
26. காரம்
27. அட்டைவிடல்
28. அறுவை
29. கொம்பு கட்டல்
30. உறிஞ்சல்
31. குருதி வாங்கல்
32. பீச்சு.

இவற்றுள் மை, கலிக்கம், நசியம், பசை, பீச்சு - ஓராண்டு வன்மையுள்ளது.

நாசிகாபரணம், நீர், வர்த்தி, பொடி - மூன்று திங்கள் வன்மையுள்ளது.

களிம்பு, சீலை - ஆறு திங்கள் வன்மையுள்ளது.

<u>வைத்திய சிந்தாமணி வெண்பா - 4000:</u>

வைத்தியம் [1] - நோயாளிக்குச் செய்யும்பரிகாரம் எனப்படும்.

மேலும் வை - து - சிலம்;[2] வையகத்தாருக்கு வேண்டப்படும் நுகர்ச்சிப் பொருள்களை அவரவர் உடம்பு நிலைக்குத் தக்கபடி கூறும் நூல் என்றும் கூறப்படுகிறது.

(Physician must possess thorough knowledge of the drugs and the body and be able to select the Drugs to said the patient).

வைத்தியம் என்னும் சொல் மருத்துவம் என்றும் குறிப்பிடப்படுகிறது. இச்சொல், நீக்குகை, மாற்று மருந்து, பரிகாரம், வைத்தியம், சிகிச்சை என்கின்ற பொருள்களைக் குறிக்கும்.

இயற்கைக்கு மாறுபட்ட உணவாதி, செயல்களால், உடலுக்கு ஏற்படும் மாறுபட்ட துன்ப நிலையை போக்கி, உடலை நல்ல நிலையில் வைக்கப் பயன்படுவது மருத்துவம் வைத்தியம் எனப்படும்.

<u>சிந்தாமணி:</u>

விரும்பிய அனைத்தும் கொடுக்கவல்ல தெய்வமணி.

(A Mythical gem bellived to yield to its possessor everything that is derived).

தமிழ் ஆங்கில அகராதி. டி.வி. சாம்பசிவம் பிள்ளை - [illegible]

சிந்தாமணி, சிந்தா + மணி (1) விரும்பியதைக் கொடுக்கும் இரத்தினம் என்றும் (2) சிவபெருமான் உமாதேவியாருக்கு அருளிச்-செய்த யதார்த்த குண சிந்தாமணி என்னும் நூலாகவும் (3) சமணர் காலத்தில் தென்னிந்தியாவில் தமிழர்கள் கையாண்டு வந்த சித்த வைத்திய நூற்களினின்று திரட்டி எழுதிய ஓர் சிறந்த வைத்திய நூல் என்றும் (4) தமிழ் சித்த வைத்திய நூற்களினின்று வடமொழியில் மொழி பெயர்த்த நூல் என்றும் (5) அகத்தியர் செய்த தமிழ் வைத்திய நூற்களினின்று திரட்டி எடுத்து மலையாளத்தில் கையாளப்பட்டு வரும் நூல் என்றும் (6) தன் வந்திரியார் செய்யப்பட்ட ஓர் வடமொழி வைத்திய நூல், இதில் ரோக நிதானத்தைப் பற்றிச் சொல்லும் என்றும் பல்வேறு கருத்துக்கள் குறிப்பிடப்படுகிறது.

மேலும் சிந்தாமணி வைத்தியம், தமிழ் நாட்டில் வழங்கி வந்த சித்த வைத்திய முறையை மலையாள பாஷையில் மொழி பெயர்த்து எழுதி மலையாளத்தில் சில வைத்தியர்களால் சரக, சுசுருத ஆயுர் வேதத்திற்கு மாறாக கையாளப்படும் ஒரு முறை என்றும் காணப்படுகிறது.

சிந்தாமணி, என்னும் பெயருடைய (பதிப்பிக்கப்பட்ட) நூல்கள், கிடைத்தவற்றை ஆய்வுக்குரிய வைத்திய சிந்தாமணி வெண்பா 4000 இச்சுவடியை வைத்து ஒப்பிட்டபோது, இது அவைகளினின்று மாறுபட்டதாகவும், அச்சுக்கு வராததாகவும், முடங்கிக் கிடந்தது தெரிய வந்தது. ஆகவே, சிந்தாமணி வரிசையில் இந்நூல் மற்றொரு பதிப்பு நூலாக அமைகிறது.

மேற்கூறப்பட்ட கருத்துக்களில், தன் வந்தரி வைத்தியச்-சிந்தாமணி என்பதில் தன்வந்திரி வைத்திய சிந்தாமணி 1200 - என்ற நூலும், பதார்த்த குணசிந்தாமணியும் வெளி வந்துள்ளது. பதார்த்த குணசிந்தாமணியும் மருந்துப் பொருட்களின் குணங்களைக் குறிப்பதாக உள்ளது.

கீழ்க்கண்ட காரணங்களால் இந்நூல் சித்த மருத்துவத்தைச்-சார்ந்தது எனக் கொள்ள முடியும்.

1. இந்நூலில் மருந்தின் பெயர்கள் முற்றிலும் வடச்சொல்லாக அல்லாமல், தமிழும் கலந்து காணப்படுகிறது.

2. ஓரிரண்டு மருந்துப் பொருட்களைத் தவிர மற்ற மருந்துப்-பொருட்கள், தமிழ் பெயராகவே உள்ளது.

(உ-ம்) அமுக்கிரா -- அசுவம்

யானைத்திப்பிலி-- கெசத்திப்பிலி

3. 'பா' வினங்களில் சிறந்த வெண்பா வால் இயற்றப்பட்டுள்ளது.

4. இந்நூல் தனித்து இல்லாமல், மற்ற சில நூல்களாகவே -- அகத்தியர் நூல்கள், முன் பின் ஏடுகளில் காணப்படுகிறது.

ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட நூல் எண் 2421 மட்டுமல்லாமல், துணை நூலாகக் கொண்ட நூ. எண் 948 நூலும், தனியாக இல்லாமல், மற்ற நூலுடன் கலந்து (அகத்தியர்) காணப்படுகிறது.

ஆகவே அகத்தியரால் செய்யப்பட்ட நூலாக இருக்கலாம் எனவும் எண்ண முடிகிறது. நூல் முடிவு இல்லாமையால், ஆசிரியர் பெயரோ, எழுதப்பட்ட காலமோ தெரியவில்லை.

2. ஆரியர்கள், ஜைனர்கள், புத்தர்கள் போன்றோர்களால், சமஸ்கிருதத்திற்கு முக்கியத்துவம் தந்ததால் தமிழ் தன் வளப்பத்தை இழந்தது என்றும், அறிய முடிகிறது.

தமிழ் இலக்கியத்திற்கு ஜைனர்கள், பதினெண் கீழ் கணக்கு நூல்கள், குறள் போன்ற நூல்களை வழங்கியுள்ளமையால் அறிய முடிகிறது.

எனவே, சமணர் காலத்தில் தென்னிந்தியாவில் தமிழர்கள் கையாண்டு வந்த சித்த வைத்திய நூற்களினின்று திரட்டி எழுதிய வைத்திய நூலாக இருக்கலாமோ எனவும்எண்ண முடிகிறது.

3. மேலும், நூல் ஆரம்பத்தில் 'தாது நிதானம்' கூறப்படுகிறது. நாடி பற்றியவற்றை ஆயுர்வேதம் அவ்வளவாகச் சொல்லவில்லை.

ஆகவே, இந்நூல் சித்த வைத்திய முறையைச் சார்ந்ததாக இருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வர முடிகிறது.

வெண்பா :

'பா'வினங்கள் 5 வகைப்படும். (1) வெண்பா, (2) ஆசிரியப்பா (3) வெஞ்சிப்பா (4) கலிப்பா (5) மருட்பா எனப்படும். இவற்றுள் வெண்பா சிறந்ததாகக் கருதப்படுகிறது. இந்நூல் வெண்பாவால் ஆனது என்பதற்கு இந்நூலின் தலைப்பே சான்றாக உள்ளது. மேலும் நூலின் ஆரம்பத்தில்,

'வெண்பாவாய் யானும் விளம்புதற் கெள்ளாவிலே
வெண்பாவாய் மேவாய் விரைந்து'

என்பதாலும், அகச்சான்றாக, தாது நிதானத்தில் 97 பாடல்.

வெண்பாவைப் பண்பாவை வெரியயன்றாமரையில்
கண்பாவைப் போல்வெங்க கண்பாவை--நண்பாக்கு
மாலயனும் சங்கரனும் வாழ்த்தியிடப் புண்டரீக
வாலயத்தில் வாழு மனம்.

-(97)

என்பதாலும் இந்நூல் வெண்பாவைக் கொண்டது என்னும் கருத்து உறுதிபடுகிறது.

நூலின் தன்மை :

நூலில் நோயின் தன்மையோ, தீர்க்கும் முறை பற்றியோ கூறப்படாமல், மருந்துகளைச் செய்யும் முறை, தீரும் நோய்கள் என்ற வகையிலும், ஆரம்ப பகுதியில் நாடி கொண்டு நோய் தன்மை அறியும், நாடி நிதானமும், தாது பொருட்களின் சுத்தி முறைகள் கூறப்படுகிறது.

மேலும், சித்த மருத்துவ பரிகார முறையில், தேவமருத்துவம், மானிட மருத்துவம் விளக்கும், என்பதில்,

கியாழவகை

பற்பம், செந்தூரம்

மாத்திரை

திராவகம்

தயிலம்

கிருதம்

லேகியம்

ரசாயனம்

என்ற முறையில் நூலில், மருந்துப் பகுதிகள் அமைகிறது. மேலும் நூலின் இறுதில் கர்ப்பமுற்ற பெண்களுக்கான, சிலமருத்துவ முறைகள், 'கர்ப்ப வாலக்கிரிகை' என்ற தலைப்பில் உரைநடையில் அமைந்துள்ளது. இதில் ஒவ்வொரு மாதத்திலும் சூல் பெண்களுக்கு ஏற்படும், சில நோய்கட்கு மருந்து கூறப்பட்டுள்ளது. கிடைத்த ஏட்டில் அறுவை மருத்துவம் பற்றி அறிய முடியவில்லை.

ஆய்வுக்கு எடுத்துக் கொண்டுள்ள கியாழம், கிருதம் இரண்டும், அகமருந்துப் பிரிவிலே அடங்குகிறது. கிருதத்தில் இறுதியாகக் கூறப்பட்ட 'நயன சஞ்சீவி கிருதம்', குளிப்பதற்கு பயன்படும் புற மருந்தாக கூறப்பட்டுள்ளது.

<u>கியாழம்</u>:

'மருந்து நீர் குடிநீ ருண்ணீர் வழங்கிய கஷாயப்
பேராம்'

இது குடிநீர், உண்ணீர், வாய் குடித்திடும் புனல் என்றும், ஆயுர்வேத மருத்துவர்களால் கஷாயம் எனவும் அழைக்கப்படுகிறது.

இஃது உலர்ந்த சரக்குகளையாவது, ஈரமாயுள்ள சரக்குகளையாவது, வேறு பொருள்களையாவது இடித்து, அதற்குச் சொல்லப்பட்டுள்ள அளவின்படி தண்ணீர் விட்டு, இரண்டுக்கு ஒன்றாகவாவது, நான்குக் கொன்றாகவாவது, ஆறுக்கொன்றாகவாவது, எட்டுக் கொன்றாவாவது, பதினாறுக்-கொன்றாவாவது, இருபத்து நான்குக் கொன்றாகவாவது, காய்ச்சி வடிகட்டி எடுத்துக் கொள்வதாம்.

இது, தொகைக் குடிநீர் வழியாகவும், செய்யப்படும். ஐங்கோலக் குடிநீர் (பஞ்சகோலக் குடிநீர்) ஐவேர் குடிநீர் (பஞ்சமூலக் குடிநீர்) போன்ற தொகைச் சரக்குகளால் மேற்-சொல்லப்பட்டபடி காய்ச்சி வடிகட்டி எடுத்துக் கொள்வதாகும்.

இந்நூலிலே சான்றாக, வாதசுரம் கியாழம் கூறும் முதல் பாடலில் 1/8 ஆகக் காய்ச்ச வேண்டும் என்று கூறப்படுகிறது.

| | | |
|---|---|---|
| மற்றும் | தசமூல கியாழம் | 82 |
| | பஞ்ச மூலக் கியாழம் | 83 |
| | அஷ்டமூல கியாழம் | 84 |
| | அஷ்டா தசமூல கியாழம் | 85 |

என்று தொகைக் குடிநீரும் இந்நூலில் கூறப்பட்டுள்ளது.

குடிநீர்க்குரிய நீரிலக்கணம்:

சேறு, நீர்ப்பாசி, சுக்கானி, சீதளம், சருகு, உப்புக்காற்று இவைகளின் சம்பந்தமான நீர் எதுவும் குடிநீர் வைப்பதற்கு உபயோகப்படுவதன்று.

ஏரி, குளம் இவைகளில் பழமையுறாது மாற்றப்படுகின்ற நீர், ஊற்று நீர், ஆற்று நீர் பயன்படும். இக்காலத்தில், நாம் சுத்தமான நீரை மட்டுமே பயன்படுத்த முடியும்.

<u>நெய்</u>:

பசுவின் நெய்யுடன், தனி இலைச்சாறு அல்லது தனிக்-கிழங்குச்சாறு, பல இலைகளின்சாறு, பல கிழங்குகளின் சாறு, மற்றும் கற்கங்களைச் சேர்ந்தாவது, சரக்குகளின் குடிநீரைச் சேர்த்தாவது, அடுப்பில் ஏற்றி நெய்பக்குவத்தில் காய்ச்சி, வடித்துக் கொள்வதாகும்.

<u>அளவு</u>:

1) நூலில் மருந்து செய்பொருட்களின் அளவுகள் முறையாக (சில இடங்களில் கூறாமலும் உள்ளது) கூறப்பட்டுள்ளது.

(உ-ம்) போந்த மருந்தோர் பலமாம் -- 3
வார்சதை களோர் குறுணி -- 143

அளவுகள் பழைய கால முறைப்படி எழுதப்பட்டுள்ளது.

<u>அநுபானம்</u>:

தயாரித்த மருந்தை எதனுடன் சேர்த்து சாப்பிட வேண்டும் என்றும், தேவையான இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.

தேன்விட்ட குடிநீர் -- 138

பாங்கு பதமாயிறக்கும் பகர் பூசனி நெய்யைத்
தாங்கிச் சருக்கரையிற் றானுண்ண . . . .
-170

நூலில் மருந்தின் பெயர்:

நூலில் மருந்தின் பெயர், (1) நோயின் பெயராலும், (2) மருந்தின் முக்கியப் பெயராலும், (3) தொகை பெயராலும், (4) உறுப்பின் பெயராலும், (5) துணை பொருள் பெயராலும் பல வகைகள் அமைகிறது.

சான்றுகள் சில: நோய் பெயரால்:

| | | |
|---|---|---|
| வாத சுர குடிநீர் | -- | 2 |
| பித்த சுர குடிநீர் | -- | 8 |

தொகை பெயரால்:

| | | |
|---|---|---|
| பஞ்ச மூல கியாழம் | -- | 83 |
| அஉஷ்டா தசமூலம் | -- | 85 |

மருந்தின் முக்கியப் பொருளால்:

| | | | |
|---|---|---|---|
| (1) கடுக்காய் நெய் | 159 | -- | 164 |
| (2) வாராதி கிருதம் | 194 | -- | 197 |

உறுப்பின் பெயரால்:

நயன சஞ்சீவி கிருதம் 272

நூலில் மருத்துவரை விழித்துக் கூறுவது போலவும், நோயாளருக்கு கூறுவது போலவும் அமையும் கூற்றுக்கள் காணப்படுகின்றன.

சான்று:

| | | |
|---|---|---|
| நம்பியே கொள்வீர் நயந்து | -- | 12 |
| பித்த சுரம் கேள் | -- | 8 |
| திட்டமுறச் சொல்வீர் தெரிந்து மேதினி | -- | 17 |
| வாய்க் கொள்வீர் கனிந்து | -- | 55 |
| கிட்டிடச்சீ தசுரம் போம் கேள் | -- | 59 |

சித்தர்களின் பாடல்களிலும், மருத்துவத்திலும் பெண்ணை முன்னிலைப் படுத்திக் கூறுவது போல் சில இடங்களில் அமையும். இதைப்-போலவே இந்நூ லிலும் பெண்ணை முன்னிலைப்படுத்தி,

| | | |
|---|---|---|
| கச்சினின முலையாய் காண் | -- | 16 |
| சீரொன்று மாமுலையாய் செப்பு | -- | 218 |
| வைவேல் விழியணங்கே வாழ்த்து | -- | 263 |
| ரேந்து முலைமானே யியம்பு | -- | 266 |
| காரார் குழலாய்க் கலன் புனை . . | -- | 48 |
| பூண் முலையீர் னுவி . . . . | -- | 151 |
| பான் மொழி நீ . . . . | -- | 162 |
| கிள்ளை மொழி மானனையீர் | -- | 240 |

நூலில் -- வடமொழியும், வடச்சொற்களும்:

வடமொழி மருந்துப் பெயர்களும், எழுத்துக்களும், தாராளமாக காணப்படுகிறது.

| | | |
|---|---|---|
| வடமொழி யினாட்டும் யே . . . | -- | 86 |
| அசுவகெந்தாதி கிருதம் . . . . | -- | 246 -- 250 |
| வாசாதி கிருதம் | -- | 191 -- 197 |

<u>பொதுவாகச் சில குறிப்புகள்</u>: (அளவு குறிப்பிடாத போது)

(1) எந்தக் குடிநீர்கட்கும் 1/8 பாகமாய்ச் சுருக்கி எடுத்துக் கொள்ள வேண்டும்.

(2) மூலம் என்றால் சூலம் எனக் கொள்ள வேண்டும்.

(3) அளவு கூறாத இடத்து சம அளவாகக் கொள்ள வேண்டும்.

(4) மருந்து சாப்பிடுங் கால அளவு கூறாத இடத்து 3 நாள் மட்டும் கொள்ள வேண்டும்.

(5) பத்தியம் சொல்லாத போது, இச்சா பத்தியம் என்று தீர்மானிக்க வேண்டும்.

<u>இச்சாபத்தியம்</u>:

முள்ளுள்ள பாகல், மா, கத்தரி, கொத்தவரை, பூசனி முதலிய காய்கள், அகத்தி, மந்தவகைப் பொருட்கள், கடுகு, எள்ளு, நீக்குவதுடன் போகமும் நீக்க வேண்டும்.

(6) சாறு வரா மூலிகைகளில் சாறு எடுக்க,

முடக்கறுத்தான் சுட்ட சாம்பல் ஒருபடியை ஒரு பாண்டத்திலிட்டு, கோமூத்திரம் 4 படி விட்டுக் கரைத்துத் தெளிவிறுத்து அதில் 1 பலம் வெங்காரம் போட்டுக் காய்ச்சி எடுக்க, வெண்மையான உப்பு உண்டாகும். இதற்கு வெங்கார லவணம் என்று பெயர். இதைச் சிறிது சேர்த்து, கசக்கிப் பிழியச் சாறு வரும்.

மூலச்சுவடிக்கும், துணைச் சுவடிக்கும் சில ஒற்றுமை வேற்றுமைகள் காணப்படுகின்றன:

| ஆர்.2421 | ஆர்.948 |
|---|---|
| நூல் ஆரம்பம் உள்ளது | அவ்வாறே உள்ளது |
| நூல் பகுதிகள் அதிகம் | குறைவு |
| நூல் முடிவு இல்லை | முடிவு இல்லை |
| ஒவ்வொரு பகுதிக்கும் மொத்த எண்ணிக்கை உள்ளது | |
| நூல் முழுவதும் தொடர் எண் இல்லை | அவ்வாறே உளது |
| புள்ளியில்லாமல் எழுதப்பட்டுள்ளது | புள்ளியுடன் எழுதப்பட்டுள்ளது சிலஇடங்களில் புள்ளியில்லாமலுள்ளது |
| உட்தலைப்புகள் | உட்தலைப்புகள் |
| பாடல் ஆரம்பம் இடது புறத்தில் எழுதப்பட்டுள்ளது. | இடது ஓரத்தில் மட்டும் உள்ளது |
| நூல் பழையதாக செல்லரித்து காணப்படுகிறது. | நன்றாக உளது. |
| ர, ா, ர் வேறுபாடு இல்லை | ர,ா,ர் ஆகியவை சில இடங்களில் 'ர' என உள்ளது. |
| ஒன்றிரண்டு உட்தலைப்புகள் விடுபட்டுள்ளது. | இதிலும் அவ்வாறே உளது. |
| (உ-ம்) திருவா சன்னி அந்த கமா சன்னி வெற்றேடுகள் இல்லை | இறுதியில் வெற்றேடுகள் உளது |
| சோற்றி | சோத்தி |
| தோற்று | தோத்து |
| காவிற் | காவின் |

மேலே சில ஒற்றுமை வேற்றுமை காட்டப்பட்டுள்ளன.

ஆர். எஸ். 2421 ஐ மூக மூலபாடமாகக் கொள்ளக் காரணம்:

நடை, மருந்துப் பகுதிகளின் எண்ணிக்கை, சுவடியின் பழைய தோற்றம், புள்ளியில்லாமல் எழுதப்பட்டத் தன்மை, சுவடியில் இடது ஓரம், மருந்தின் ஆரம்பத்தில் உட்தலைப்பு கொடுத்திருத்தல் ஆகியவைகளால் இந்நூலை 'மூக மூல' ஏடாகக் கொண்டேன்.

முடிவு:

1. சித்த மருத்துவம் சிறந்த மருத்துவமாகும். எளிமையான இயற்கையோடு இயைந்த, காலத்தால் மாறாத, தமிழர்களின் சூழ்நிலைக்கேற்ற மருத்துவமாகும்.

2. பெரிய மருந்துகளை வைத்தியர்கள் கையாண்ட போதிலும், அன்றாட வாழ்வில், நாம் நம்மை அறியாமலே சித்த மருத்துவத்தைப்-பின்பற்றுகிறோம்.

3. இம்மருத்துவத்தில் 'பரிபாஷை' சொற்கள் காணப்படுகிறது. மேலும் இம்மருத்துவம் செய்யுள் நடையில் உள்ளது.

4. ஆரியராலும், ஜைனராலும், புத்த மதத்தினராலும், முகமதியராலும், ஆங்கிலேயராலும், இம்மருத்துவம் தன் வனப்பை இழந்தது.

5. இன்று மீண்டும் அரசாலும், தனி நிறுவனத்தினராலும், மீட்டும், செழிப்புறத் தொடங்கியுள்ளது.

6. சித்த மருந்துகளின் தொகுப்பு முறையே இந்நூலில் காணப்படும் செய்தியாகும்.

7. சிறப்பான வெண்பாவால் இயற்றப்பட்டுள்ளது.

8. வேண்டியதைத் தரும் சிந்தாமணியைப் போன்ற பலவித நோய்கட்கு பலவேறு மருந்துகளைக் கூறுகிறது.

## பதிப்பில் வந்துள்ள சிந்தாமணி என்னும் பெயர் கொண்ட நூல்கள்

| | | |
|---|---|---|
| 1. | யூகிமுனி வைத்திய சிந்தாமணி | 800 |
| 2. | விஷ வைத்திய சிந்தாமணி | |
| 3. | வைத்திய ராஜ ரத்தின சிந்தாமணி (தஞ்சை) | I, II |
| 4. | இரசவாத சிந்தாமணி | I,II பகுதி |
| 5. | யாகோபு வைத்திய சிந்தாமணி | 750 |
| 6. | திருவள்ளுவர் நவரத்தின வைத்திய சிந்தாமணி | |
| 7. | தன்வந்திரி வைத்திய சிந்தாமணி | 1200 |
| 8. | தன்வந்தரி நாடி சுர ஜன்னி பாத சிந்தாமணி | |
| 9. | மானிட ஜீவிய சிந்தாமணி | |
| 10. | வைத்திய சிந்தாமணி -- கண்ணுசாமியம் | |
| 11. | வீரமாமுனிவர் அனுபோக வைத்திய சிந்தாமணி | |
| 12. | அபிதான சிந்தாமணி | |
| 13. | ஜீவோர்பத்தி சிந்தாமணி | |
| 14. | சீவக சிந்தாமணி | |
| 15. | சித்த மருத்துவ சிந்தாமணி | |
| 16. | திரு . . . . . . . . சிந்தாமணி | |

உறரி ஒல

வைத்திய சிந்தாமணி வெண்பா நாலாயிரம், தாதநிதானம் என்று நூலின் இடது பக்கத்தில் எழுதி உள்ளது.

உறரி ஒல என்பது -- உறரி ஓம் எனப்படும். ம் -- ல - வாக எழுதப்பட்டுள்ளது.

பொதுவாக சித்தர்களின் நூல்களில் குறிப்பாக மருத்துவ சம்பந்தமான நூல்களில், கடவுள் வாழ்த்து, பாயிரம், குரு வாழ்த்து முதலியவை கூறப்பட்டு, பின்பே நூல் தொடங்கப்படுகிறது. சில நூல்களில் கடவுள் வாழ்த்து இல்லாவிடினும், குரு வாழ்த்து நிச்சயமாக இருக்கும். கடவுள், குருவாழ்த்துக்குப் பின் ஓரளவிற்கு எல்லா நூல்களிலும், நூலின் பெயர், அது கூறும் விபரம் பற்றிய செய்யுள் காணப்படும். ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட இந்நூலிலும், நூலானது இவ்வாறே அமைகிறது.

நூல் ஒரு குறிப்பிட்ட 'பா' இனத்தைச் சேர்ந்ததாக இருந்தாலும், கடவுள் வாழ்த்து முதலியவை, வெண்பாவாகவோ, ஆசிரியப்பாவாகவோ, எண்சீர் விருத்தம் போன்ற பல்முறைகளில் எழுதப்பட்டிருக்கும். இந்நூல் வெண்பாவாக இருந்த போதிலும், கடவுள் வாழ்த்து, நூல் செய்திகள் வெண்பாவாகவே உள்ளது.

பொதுவாக, நூலின் ஆரம்பத்தில், எழுதியவர் பெயர் குறிக்கப்படும். இல்லாவிடில் நூலின் இறுதியில் குறிக்கப்படும்.

இந்நூலில் ஆரம்பத்தில் எழுதியவரின் பெயர் குறிப்பிடப்படவில்லை. மேலும் நூல் முழுமையாக இல்லாததாலும் ஆசிரியர் பெயர் அறிய முடியவில்லை.

முதலில் விநாயகக் கடவுளை வேண்டியும், பின் சரஸ்வதியையும் வாழ்த்தும், கடவுள் வாழ்த்துப் பகுதி அமைந்துள்ளது. 'எல்லாச்சமயத்தருக்கும்' என வாழ்த்துப் பகுதியில் (3-வது செய்யுள்) குறிப்பிடப்பட்டுள்ளதிலிருந்து, இந்நூல் எழுதப்பட்ட காலத்தில் சமய வேறுபாடு இருந்திருக்க வேண்டும் என்ற வரலாற்றுச் செய்தியினையும் அறிய முடிகிறது. சமய வேறுபாடின்றி இந்நூலை எல்லாருக்கும் சொல்லியதிலிருந்து, எழுதியவரின் சர்வ சமய பரந்த மனப்பான்மை புலனாகிறது. மேலும் 'யாக்கையினை யல்லால் பயனில்லை' என்பதிலிருந்து (பாடல் 3) உடம்பின் முக்கியத்துவமும் அறியப்படுகிறது.

மேலும் தாது நிதானம் - 97ல் உள்ள பாடல், 'மாலயனும் சங்கரனும்' என்பதிலிருந்து, திருமாலையும், சிவனையும் போற்றியுள்ளமை தெரிகிறது.

ஏட்டின் இடது புறத்தில், இரு வேறுபட்ட எண்கள் குறிக்கப்பட்டுள்ளது. நூலின் ஆரம்பச் சுவடியில் ஏட்டின் தொடக்க எண்ணாக க, உ, . . . . என்று குறிக்கப்பட்டுள்ளது. இவ் எண், தெளிவாக இடது ஓர, தலைப்பு, உட்தலைப்புகளின் கீழ்ப்புறமாக குறிக்கப்பட்டுள்ளது. மற்றொரு வகையான எண் சற்று, முன் எண்களைக்காட்டிலும் மங்கலாக, இடது ஏட்டின் மேல், நடு ஓரத்தில் பகுதிகளிலும், சில ஏடுகளில்கீழ் பகுதியிலும் (இடது) காணப்படுகிறது.

ஒவ்வொரு ஏட்டிலும் முன்பக்கத்தில் இடது ஓரத்தில் '௨' என்ற குறிக்கப்பட்டுள்ளது. இதை நாம் இன்றைய நாளில் பயன்படுத்தப்படும் பிள்ளையார் சுழியாகவோ அல்லது, சுவடி எழுதுவோரால், சுவடி எழுதுவதற்கு முன், ~~சுவடி எழுதுவோரால், சுவடி - எழுதுவதற்கு முன்~~, சுவடி எழுதுவதற்கு, பதமாக இருக்கிறதா என்பதை அறிய போட்டக் குறியாகவோ கொள்ளலாம். ஓர் ஏட்டின் முன் பகுதியினைத் தொடர்ந்து அவ்வேட்டின் பின் பகுதியிலும் எழுதப்பட்டுள்ளது. அவ்வாறு தொடர்வது சொற்கள் முடிவு பெற்ற பின்னோ, பெறாமலோ தொடர்கிறது. ஒரு இடங்களில் தொடர்ச்சியைக் குறிக்கு ( - ) சிறு கோடு இடப்பட்டுள்ளது.

(உ.ம்) ஏடு எண் - 10. ன் முன்புறம்
ஏடு எண் - 8. ன் பின்புறம்

வெண்பாவின் இரண்டாம் அடியில் தனிச்சொல் நன்கு காட்டப்-பட்டுள்ளது. தனிச் சொல்லின் முன்பின் சிறுகோடு இடப்பட்டோ அல்லது புள்ளி வைக்கப்பட்ட நிலையோ காணப்படுகிறது.

எதுகை, மோனை அமைப்பு சரிவர அமைக்கப்பட்டுள்ளது. சில இடங்களில் சிறிது வேறுபட்டும் காணப்படுகிறது.

எதுகை, மோனை சரிவர அமைக்கப்பட்டுள்ள நிலை.

(உ.ம்)
தழுதாழை சங்கம் வேர் தான்றி கடுநெல்லி
குழுவாங் கிராந்திவேர்க் கொம்பு - பழுதறவே
நேரா யிருநாழி நீரில்வைக்க யெட்டொன்றாமிப்
பேராத வாதசுரம் போம்.

(பாடல் 1)

சில இடங்களில் மோனை ஒன்றியும், எதுகை ஒன்றாமலும் காணப்படுகிறது.

(உ.ம்)

மாதளையின் பிஞ்சு சுக்கு மாவிடையஞ் சீந்தில் முத்தந்
தாதுவில்வச் செங்கனியின்றன் வற்ற - லோதுசடா
மாஞ்சி பெருமரத்தோல் வன்கியா முங்குடிக்க
பாஞ்சிவிதி சாரம்போம் பாங்கு.

(134.)

என்ற நிலையிலும் காணப்படுகிறது.

பாட்டில், எதுகை, மோனை குறித்து அமைத்தச் சொற்கள், மற்றும் தனிச்சொல்லை அமைத்தல் என்னும் வெண்பாவின் முறையில் அமைக்கப்பட்ட சொற்கள், மருந்தின் பெயர்களை அறிவதில் குழப்பத்தை விளைவிக்கிறது.

பாட்டு என செய்யுள் முடிவில் தெளிவுடன் குறிப்பிடப்பட்டுள்ளது. எண்ணின் முன் பின் சிறுகோடு அல்லது புள்ளி வைக்கப்பட்டுள்ளது.

சுவடியில் வல, இடப் பக்கங்களில் இரண்டு துளைகள், வட்டமாக உள்ளது. இவைகள் ஏடுகளைக் கட்டப் பயன்படும் கயிறு செல்லும் துளையாக உள்ளது. நூலில் காணப்படும் பல மருத்துவப்-பகுதிகளில், ஒரு சில பகுதிகளில், அப்பகுதி முடிந்தது என்றும், சிலவற்றில் ஒன்றும் குறிப்பிடப்படாமல் அப்பகுதியின் மொத்த எண் கொடுக்கப்பட்டதைத் தொடர்ந்து, அடுத்த பகுதியின் மருந்து செய்யும் முறை ஆரம்பமாகிறது.

(உ.ம்) கியாழப் பகுதியில் 142 பாடல்கள் முடிந்ததைத்–தொடர்ந்து, மருந்துகளின் சுத்தி முறை தொடர்கிறது. ஆனால் கியாழம் முடிந்தது என்று குறிப்பிடப்படவில்லை.

ஏட்டு எண் 61–ல் 'பித்த நிதானம் முற்றிற்று' என கூறிய பின், --தைலப் பகுதியின் மகா நாராயண தைலம் ஆரம்பமாகிறது.

சில பகுதிகளில், உ.ம் கிருதம் முடிந்து லேகியம் ஆரம்பிக்கும் பகுதியில் பாடலின் மொத்த எண்ணிக்கை குறிக்கப்பட்டுள்ளதைத் தொடர்ந்து வேறு – என்று எழுதப்பட்டு வில்வாதி லேகியம் என லேகியப் பகுதி கூறப்பட்டுள்ளது. இதே போல் தைலம் முடிந்து 'கிருதம்' தொடங்கும் போதும் – வேறு – என குறிப்பிடப்பட்டு சுத்தி நெய் ஆரம்பமாகிறது.

மருத்துவப் பகுதியின் தலைப்புகள் இடது ஓரத்திலும், உட்–தலைப்புகள் அல்லது மருந்து முறைகளின் பெயர்கள், பாடலின் ஆரம்பத்திலும், இடது (ஏட்டின்) ஓரத்திலும் எழுதப்பட்டுள்ளது.

சில பாடல்களில் சில மருந்துப் பெயர்கள் முழுவதுமாக அல்லாமல், சுருக்கெழுத்தாக காணப்படுகிறது, சில இடங்களில் சற்று மாறுபட்ட நிலையிலும் காணப்படுகிறது.

| | |
|---|---|
| (உ.ம்) கடுக்காய் என்பது | கடு எனவும் |
| (27 110) | (1) |
| சிறுகாஞ்சொறிவேர் | சொறி |
| (2) | (3) |
| சந்தனம் | சந்து |
| (3) | (4) |

| | |
|---|---|
| தண்ணீர்விட்டான் | தண்ணிவிட்டான் (8) |
| முத்தக்காசு (51) | முத்தம் (8) |
| சிற்றாமுட்டி | சித்தமட்டி (9) |
| பற்பாடகம் | பற்படாம் (9) |
| கண்டங்கத்தரி | கண்டம் (10) |
| சீந்தில் 13 | சிந்தில் 14,15 |
| அதிமதுரம் 88 | மதுரம் 18,89,90 |
| ஆடாதோடையீர்க்கு | தோடையீர்க்கு 19 |
| | வாசையிலி ஈர்க்கு 20 |
| கொடிவேலி | கொடியவேலி 34 |
| வெட்டிவேர் | வெட்டி - 91 |

என இவ்வாறாக குறிக்கப்பட்டுள்ளது.

சில பாடல்களில் மொத்த சரக்குளின் எண்ணிக்கையும் சேர்த்தே கொடுக்கப்பட்டுள்ளது.

(உ.ம்)
ஆற்றுமுள்ளி பேராமுட்டி யாத்தி யிலந்தைவே
ரேற்றுகடுக் காய் சுக்கோ டிவ்வாறும் - போற்றியே
சாடிதனித் காய்குடிநீர் தங்காம லேகொடுக்க
வோடியிடும் வாதசுர மோர்ந்து

(5)

'டிவ்வாறும்' என்பதினால், இதில் மொத்தம் ஆறு சரக்குகள் என தெளிவாக விளக்கப்படுகிறது.

மருந்து பொருட்களின் 'வேர்களை' குறிப்பிடும் இடத்தில் எல்லாம் தெளிவாக பேராமுட்டிவேர் (14) சித்தாமுட்டிவேர் என தெளிவாக, வெண்பாவில் அமைக்கப்பட்டுள்ளது.

ஒவ்வொரு மருந்து தயாரிப்பின் இறுதியிலும், இந்தந்த நோய்களும் தீரும் என்பதாக முடிக்கப்பட்டுள்ளது.

(உ.ம்) வாத சுரம் விழ்ந்து. (3)

மேலும், மருந்து பகுதிகளின் தலைப்பில் கியாழம், கிருதம் என எழுதப்பட்ட போதிலும், பாடல்களில் ஒரு சில இடங்களில் 'கோதம்' என குறிக்கப்பட்டதைத் தவிர மற்ற எல்லா இடங்களிலும் குடிநீர், நெய் என்றே குறிக்கப்பட்டுள்ளது.

மேல் காணப்பட்ட அமைப்பினால், இந்நூல், முற்றிலும், 'ஆயுர் வேதத்தைத்' சார்ந்ததல்ல என்று அறிய முடிகிறது. மருந்துகளில் தயாரிப்பில் காணப்படும் பெயர்கள் எல்லாம் தமிழ்ப் பெயர்களாகவே காணப்படுகிறது. மேலும், 'சித்த மருத்துவத்தில்' எண்வகைத் தேர்வில் ஒன்றாக விளங்கும் 'நாடி' கணிப்பு முக்கியமாகக் கருதப்படுகிறது. இந்நூல் முற்றிலும் மருந்துகளாகவே காணப்பட்ட போதிலும், ஆரம்பத்தில் 'தாது நிதானம்' கூறப்பட்டுள்ளது.

. . . . . . . . . . . . .கிளர்ந்த மற்று
முள்ள நிதானஞ் சிகிட்சை யோகமுடன் சொல் வாமனது
(வாழ்த்துப்பகுதி)
. . . 4

என்று குறிப்பிட்டிருப்பதிலிருந்து, நோய்க்குறிய சிகிட்சை மட்டும் கூறப்பட்டுள்ளதை அறிய முடிகிறது. ஆகவே, கிடைக்காத பகுதிகளிலும் மருந்துகள் பற்றிய கூறுவதாக இருக்க வேண்டும்.

சுரம் என்பது வெப்பு எனக் குறிப்பிடப்படுகிறது. (உ.ம்)

பித்த வெப்பு - (17)

மேலும் ே,ெ, வேறுபாடில்லாமையால், சில நேரங்களில் மருந்தின் பெயர்களை அறிவதில் குழப்பம் ஏற்படுகிறது.

(உ.ம்) பாற்சொற்றி என்றால் பாற்சொற்றி கீரை எனவும், பாற்சோற்றி என்றால் எருக்கம்பாலையும் குறிக்கிறது. இவ்வாறு சில இடங்களில் பொருள் அறிவதில் குழப்பம் ஏற்படுகிறது.

குடிநீர் போன்ற சிறிய மருந்து முறைகளில் பொருள் அறிவதில் அதிகம் கடினம் ஏற்படவில்லை. ஆனால் லேகியம், கிருதம், எண்ணை போன்றவைகளில், ஒவ்வொரு மருந்தும், பல வெண்பாக்களில் அந்தாதி முறையில் அமைக்கப்பட்டுள்ளபோது, பொருள் அறிவதில் (ஈற்றுச்சீர், அடுத்த அடியின் முதற்சீறாக அமையும் போது) சிறிது கஷ்டம் ஏற்படுகிறது. பாடல்களில் மருந்தின் தன்மை பற்றிக் கூறும் போது, உயர்வுநவிற்சியாகக் கூறப்பட்டுள்ளது.

'காட்டா மணக்குசுக்கு காஸிட தமுதாமை
கூட்டார் திரிபலைகள் சார்கண்ட - வீட்டியவே
றொன்குடி நீரிற்கணத் தூ ருண்டிடுகில் வாத சுரம்
விண்டையப் போமே விரைந்து.
(6)

ஒவ்வொரு மருந்தின் முடிவிலும் சீடனை முன்னிலைப்படுத்தியோ அல்லது நோயுற்-றோரையோ அல்லது பொதுவாகவோ கூறப்படுகிறது. ஈற்றடியின் ஈற்றுச்சீர்.

காண் - 16

கேள் - 8

விள்ரு - 19

மகிழ்ந்து - 7

சொல்லாயேதீர்த்து-250

என்று பலவாறாக அமைகிறது. பெண்ணை முன்னிலைப்படுத்திப் பாடும் 'மகளே' முந்நிலையாகவும் எழுதப்பட்டுள்ளது.

(உ.ம்) கச்சினிள முலையாய் காண் (16)

சில மருந்து பொருட்களின் பெயர்கள் சாதாரணமாக, குறிப்பிடுவதிலிருந்து வேறு பெயர்களாக குறிக்கப்பட்டுள்ளது. அவை பற்றி விவரம் தனியாக குறிக்கப்பட்டுள்ளது.

## நூல் முடிவு

## கர்ப்பவாலக்கிரிகை.

கருப்பம் மாதம் முதற்திங்களில் வயிறு நொந்தால் தாமரைப்-பூவின் தாதவும், அல்லிப் பூவின் தாதவும் நீரில் அரைத்துப் பாலிற்-குடிக்கத் தீரும். இரண்டாம் திங்கள் வயிறு நொந்தால் காலங்கையும், நொந்து மிடறு நொந்திருக்கும். இதுக்கு செங்கழுநீர்க் கிழங்கை நீரிலரைத்துப் பாலில் குடிக்கத் தீரும்.

. . . . . . . 7ம் திங்கள் வயிறு நொந்தால் இதுக்கு மிளகு கண்டு சர்க்கரையும், நெல் பொரியும் நீரில் அரைத்துப் பாலிற் குடிக்கத் தீரும். 8ம் திங்கள் நொந்தால் . . . . . . . . . . இதுக்கு மிளகுந் தாமரைப் பூவின் தாதவும் திப்பிலியும் நீரில் அரைத்துப்-பாலிற் குடிக்கத் தீரும். 9ம் திங்கள் வயிறு நொந்தால் பூரசம்பாலும் அதில் . . . . . .

இதற்கு மேல் நூலின் இறுதிப் பகுதி காணப்படவில்லை.

முடிவு:

இந்நூல் 'சிந்தாமணி' என்னும் பெயருக்கேற்ப எளிய, நல்ல மருந்து முறைகளை விளக்குவதாகவும், மருத்துவர்கள் எளிதில் பின்பற்றக் கூடியனவாகவும் உள்ளது.

சாதாரணமாக உபயோகப்படுத்தப்படும் பெயர்களும்,

அதற்கு இந்நூலில் பயன்படுத்தப்பட்டுள்ள

| | பெயர்களும் | பயன்படுத்தப்பட்டுள்ள பெயர்களும் |
|---|---|---|
| 1. | சமுத்திராப்பழம் | அட்டி |
| 2. | அத்தி | ஆத்தி |
| 3. | சீந்தில் | அமுதவல்லி |
| 4. | மஞ்சிட்டி | அமுதரம் |
| 5. | சிற்றாமுட்டி<br>பேராமுட்டி | இரண்டு முட்டி |
| 6. | வெண் காக்கணம்<br>கருங்காக்கணம் | சங்கிரண்டு |
| 7. | வெட்டிவேர் | இருவேர் |
| 8. | திப்பிலி மூலம் | கணமூலம் |
| 9. | கையாந்த கரை அல்லது கரிசாலைவேர் | கண்ணன் வேர் |
| 10. | சிறுபயிறு | கரும்பயறு |
| 11. | குடிநீர் | கோதம் |
| 12. | மூக்கொற்றிப் பூண்டு | கூத்தன் குதம்பை |
| 13. | வில்வம் | கூவிளம் |
| 14. | திப்பிலி | கோலி |
| 15. | சங்கு புஷ்பம் (காக்கணம்) | சங்கு |
| 16. | சந்தனம் | சந்து, சந்தி |
| 17. | அருவதா | சதாப்பிலை |
| 18. | கிரிப்பூண்டு | சடைச்சி |
| 19. | நெய்சட்டி | சிதேவி செங்கழுநீர் |
| 20. | காஞ்சொறிவேர் | சொறி |

| | | |
|---|---|---|
| 21. | சிற்றாமுட்டி | திசைசூலம் |
| 22. | திப்பிலி வேர் (கண்ட திப்பிலி) | தேசாவரம் |
| 23. | நிலவேம்பு | பூநிம்பம் |
| 24. | ஆடாதோடை | பெருந்தோடை வாசை |
| 25. | கொடிவேலி | மட்டாங்கொடி |
| 26. | மாவல்லிக்கிழங்கு | மாகாளி வாரசி |
| 27. | மிளகு | மிரி |
| 28. | ஓமம் | மோதம் |
| 29. | சடாமாஞ்சி | மாஞ்சி |
| 30. | திப்பிலி | கணம் |
| 31. | கண்டங்கத்திரி | கண்டம் |
| 32. | கல்யாண முருங்கை | முருக்கம் |
| 33. | சிற்றாமுட்டி )<br>பேராமுட்டி )<br>நாகமுட்டி ) | மூன்றமுட்டி |
| 34. | நாயுருவி | வளசவிலை |
| 35. | வீழி | விழுதி |
| 36. | இஞ்சி | வேர்க்கொம்பு |
| 37. | இஞ்சி | நாகரம் |

## மூலிகைகள்

### அதிமதுரம்

(நூலில் காணப்படுவது- சில-சிறு விளக்கம்)

**GLYCYRRHIZAE GLABRA**

Eng: Sweet Wood

இது செடி வகையைச் சார்ந்தது. அதிக இனிப்பை உடையது எனப் பொருள்படுகிறது. இது அதிங்கம், அட்டி, மதுகம் எனவும் வழங்கப்படுகிறது.

ப.உ. வேர்.

வரட்சியகற்றி, உள்ளழலாற்றி, கோழையகற்றி, உடல் உரமாக்கி, நீர்பெருக்கு போன்ற செய்கைகளை உடையது.

கத்தியரி முப்பிணியால் வருபுண் தாகங்
 கண்ணோய்உள் மாதம்விக்கல் வலிவெண்குட்டம்
பித்த மெலும் புருக்கி கிரிச்சரம் ஆவர்த்த
 பித்தமத மூர்ச்சை விட பாகம் வெப்பந்

தத்தி வரு வாதசோ ணிதங்கா மாலை
 சருவவிடங் காமியநோய் தாதுநட்டங்
குத்திருமல் ஆசியங்கம் இதற்நோய் இந்து
 குயப்புண்ணும் மதுகமெனக் கூறுங் காலே,

(தே.கு.)

என்பதற்கேற்ப, இது, முப்பிணியால் வரும் புண், நீர் வேட்கை, கண்நோய்கள், வெறிநோய், விக்கல், வெண்குட்டம், எலும்பு பற்றிய நோய், சிறுநீர் எரிச்சல், நஞ்சுகள், காமாலை, வெப்புநோய்கள், முதலிய நோய்களைத் தீர்க்க பயன்படுகிறது என்பதை அறிய முடிகிறது.

ஆடாதோடை குடிநீர், கஞ்காச மாத்திரை, கண்டாவிழ்தம், அதிமதுர லேகியம், கஞ்சா லேகியம், இம்பூறல், குடிநீர், அரக்குத்தைலம், நூலில் பித்த சுர கியாழங்களிலும், அதிசாரக் குடிநீர், அதிசார வீக்கத்துக்குரிய குடிநீர், சுத்திநெய், பூசனிக்காய் நெய் போன்றவைகளில் பயன்படுத்தப்படுகிறது.

**Contituents:** Root contains Glycyrrhtzae, a yellow avnorphous powder, Asparagin, Sugar, Starch acid Resin, Gum Mucilage, Phosphoric, Sulphuric and Malic acids, Calcium, and Magnesium salts. Bark contains a small quantity of Tanin. Decotion of the root possesses astringent properties.

<u>அதிவிடயம்</u>: (Aconitum Heterophyllum)

Eng: Indian Atees.

செடி வகையைச் சார்ந்தது. அத்திரை, பங்குரை, மாதிரி எனவும் அழைக்கப்படுகிறது.

ப.உ. வேர்.

பசித் தீ தூண்டி துவர்ப்பி, வெப்பகற்றி, ஆண்மை பெருகல், உடல் உரமாக்கி, முறைவெப்பகற்றும் செய்கை முதலியவற்றை உடையது.

அதிவி டயம்சர்க்க ராற்புதநோய் வெப்பு
கொதிமருவு பேதியோடு கோழை – எதிர்வாந்தி
என்றுரைக்கும் நோய்கூட்டம் இல்லா தகற்றிவிடும்
குன்றை நிகர்முலையாய்! கூறு
(அ.கு)

என்பதற்கேற்ப புண், முறைச்சுரம், பெருங்கழிச்சல், கோழை முதலிய நோய்களைப் போக்கும். அதிசார குடிநீர், தோடாதி சார குடிநீர்

நிலவேம்பு குடிநீர், புளியாரைக் கிருதம், கபாட மாத்திரை, அபிவி-வடகம் போன்றவற்றியில் பயன்படுத்தப்படுகிறது.

Contituents: The Non-Crystaline (Amorp hows) intensly bitter Alkolvid, Atisine which is non toxic, aconitic acid, tani acid, abundant starch, fat, a mocture of olive, Vegetable mucilage, cane sugar, and ash 2% This root contains an Alkoloid Aconitine.

அத்தி: (Ficus Glomavata) Eng: Country fig.

மர வகுப்பைச் சேர்ந்தது. அதம, உதும்பரம், கோளி எனவும் அழைக்கப்படுகிறது.

ப.உ. பிஞ்சு, காய், கழம், பட்டை, மது.

பட்டை, பிஞ்சு, காய், துவர்ப்பு செய்கையையும், பழம், குருதி பெருக்கி,மலம் இளக்கிச் செய்கைகளையும் உடையது.

வீறு கடுப்பிரத்தம் வெஞ்சீத ரத்தமொடு
நாறு விரணங்களெல்லாம் நாடாவாம் கூறுங்கால்
அத்திதரு மேகம்போம் ஆயிழையே! எஞ்ஞான்றும்
அத்திப்பாற் பட்டைக் கறி.

(அ.கு)

என்பதிலிருந்து கடுப்புடன் கூடிய ரத்தக்கழிச்சல், நாற்றமெடுக்கும் நாட்பட்ட புண், மேக நோய் முதலியவை நீங்கும்.

பஞ்ச துவப்பிகளில் ஒன்றாகக் கருதப்படுகிறது. இரத்த மூலம், கழிச்சலுக்குப் பயன்படும் மருந்துகளில் சேர்கிறது.

Contituents: Pork contains tanin, Caoutchonc andWax. 

<u>அமுக்கிராக் கிழங்கு:</u> (Withama Sommfera)

Eng: Winter Cherry.

இது செடி வகையைச் சேர்ந்தது. அசுவகெந்தம், அசுவகந்தி, அசுவன் எனவும் வழங்கப்படுகிறது.

ப.உ. இலை, விதை, வேர், கிழங்கு.

கிழங்கிற்கு, ஆண்மை பெருக்கி, வீக்கமுருக்கி, உடல் உரமாக்கி, உறக்கமுண்டாக்கு, உடல் வெப்பகற்றி, சிறுநீர் பெருக்கி முதலிய செய்கைகளை உடையது.

கொஞ்சந் துவர்ப்பாங் கொடியகாயம் சூலையறி
மஞ்சுகரப் பாண்பாண்டு வெப்பதற்பு - விஞ்சி
முசுவுறு தோடமும்போ மோகம்அன வுண்டாம்
அசுவகந் திக்கென் றறி.

Constituents: (Southern Europe Plant) containing an Alkaloid Somnferin, Having Hyphotic Property.

<u>அரசு:</u> (Ficus Religiosa Linn). Eng: The Peepul tree.

பஞ்சு தவப்பிகளில் இதுவும் ஒன்றாகும். மர வகுப்பைச் சார்ந்தது. இது இந்த சமயத்தினரால் கடவுளுக்குச் சமமாக மதிக்கப்படுகிறது. இது திருமரம், அஸ்வத்தம், பிப்பிலம் எனவும் வழங்கப்படுகிறது.

ப.உ. இலை, விதை, பட்டை, வேர்.

துவர்ப்புச் செய்கை வரையது.

எரசவேர் மேல்விரணம் ஆற்றும விந்து
வெருவவரும் சுக்கில நோய் வீட்டும் - குரல் வறள்வி
தாகமொழிக் குங்கொழுந்து தாதுதரும் வெப்பகற்றும்
வேகமுத்தோ டம்போக்கும் மெய்

என்பதற்கேற்ப வேர்பட்டைகளுக்கு புண்களை ஆற்றும் பண்பை உடையது.

Contituents: Barkk contains tanin, Caoutchouc and Wax.

அரத்தை: Alpin Galanga - Eng: Galangall the Lesser -- சிற்றரத்தை, Galangal the Greates -

பேரரத்தை

ப.உ. வேர்.

கோழையகற்றி, வெப்பகற்றி, பசித்தீனண்டி முதலிய செய்கைகளை உடையது.

தொண்டையிற்கட் டுங்கபத்தைத் ஊ ரத் தரத்திவிடும்
பண்டைச்சீ தத்தைப் பறக்கடிக்கும் - கெண்டைவிழி
மின்னே! கரப்பனைவே றாக்கும் பசிகொடுக்கும்
சொன்னோம் அரத்தைச் சுகம்

என்பதற்கேற்ப, நாட்பட்ட கபம், ஈளை, இருமல் முதலியவற்றை நீக்கும், மேலும் பல்நோய்க்கும் பயன்படுகிறது.

அரத்தை குடிநீர், கண்டாவிற்தம், தாளிசாதி வடகம், கட்பாண்ட கிருதம் முதலியவற்றில் சேருகிறது.

Constituents: Root contins the compounds like Campheride, Galangin and alpinin, from the Greek Rhizomes, a pale yellow volatile essential oil.

<u>ஆடாதொடை</u>: Adathoda Vasica. Eng: Malabar Nut.

இது குத்துச் செடி வகையைச் சேர்ந்தது. இது ஆடு உண்ணாததால் ஆடாதொடை என பெயரிடப்பட்டுள்ளது. வாசை, ஆடாதோடை என்றும் அழைக்கப்படுகிறது.

ப.உ. இலை, பூ, வேர், பட்டை போன்றவை பயன்படுகிறது.

கோழையகற்றியாகவும், சிறுநீர்பெருக்கி, நுட்புழுக்கொல்லி முதலிய செய்கை உடையது.

ஆடாதோடையின் குணத்தை அடைவுட னுரைக்கக்
பாடாத நாவும் பாடும் பரிந்துமே தோடம் போகும்
வாடாத பித்தஞ், சேதம் ரோகங்கள் விலகிப் போகும்
நாடாது வியாதி தானும் நல்விழிக் குழலினா ளே.

(ஏடு)

என்பதிலிருந்து, தொண்டைக்கட்டு, பித்தம், சேத்தும நோய்கள் நீங்கும் என அறிய முடிகிறது. மேலும், இதனால், வயிற்றுநோய், குருதியழல்நோய், சூலை, வாந்தி முதலியவையும் நீங்கும்.

ஆடாதோடை குடிநீர், ஆடாதோடை மணப்பாகு முதலியவை இதனால் செய்யப்படும் மருந்துகளாகும்.

Contituents: An odorous volatile principle probably of the nature of an essential oil, fat, resin, a bitter non-volatile alcaloid called vasicinne, an organic acid Adhatodic acid; Sugar, gum, colouring matter and Salts. The largest amount of vasicine contained in the root, bark, and to the extent of 0.25% in the leaves.

<u>இஞ்சி:</u> Zingiher officinalis (Eng: Green ginger).

இஞ்சை தெரியாதவர்களே இல்லையென்று கூறலாம். சாதாரணமாகவே வீடுகளில் சுரம் மற்றபடி வயிற்றுப் பிசம், முதலியவற்றிற்கு குடிநீர் வைத்து சாப்பிடுவது வழக்கம். இஞ்சி கற்ப மருந்தாகவும் பயன்படுகிறது.

ப.உ. கிழங்கு.

அகட்டுவாய் அகற்றி, பசித்தீ ஊண்டி, உமிழ்நீர் பெருக்கி, செரிப்புண்டாக்கி முதலிய செய்கைகளை உடையது.

இஞ்சிக் கிழங்குக் கிருமல்ஐயம் ஒக்காளம்
வஞ்சிக்குஞ் சந்நிசுரம் வன்பேதி – விஞ்சுகின்ற
சூலையறும் வாதம்போந் தூண்டாத தீபனமாம்
வேலையுறுங் கண்ணாய் விளம்பு.

(அ. கு.)

இருமல், கபம், வாந்தி, சந்நிசுரம், அசீரண பேதி, சூலை முதலியவை நீங்கும்.

இஞ்சி லேகியம், இஞ்சி சூரணம், சுரசம், கற்கம் முதலியவற்றை இஞ்சியைக் கொண்டு செய்யப்படும் மருந்துகளாகும்.

Contituents: "Indian ginger contains an aromatic volatile oil, 1 to 5 p.c. of light - yellow colour having a characteristic odowr and containing camphene, phellandrene, Zingiberine, Cineol and borneol, Gingerol a yellow pungent body, an oleoresin - Gingerin the active principle, other resins and starch, K-oxalgle. The essential oil and resin, to which ginger owes its pungent flavour, occur just beneath the Skin or Grindermis.

<u>இம்பூறல்</u>: Oldeulandia Vunbella.

இம்பூராவேர், இம்பூறாவேர், சிறவேர் எனவும் அழைக்கப்படும். 'இன்பூறலைக் காணாமல் ரத்தம் கக்கிச் செத்தானே' என்னும் பழமொழியிலிருந்து, இதன் முக்கியத்துவம் புலனாகும்.

ப.உ. இலை, வேர், வேர்பட்டை, சூலம்.

கோழையகற்றி, குருதிப்பெருக்கடக்கி முதலிய செய்கைகளை உடையது.

இன்பூறா வேரை இதமாய் அருந்தினர்க்குப்
பின்பூறா தையமொடு பித்தமுமே — தன்பாம்
இருமல் சுவாசம் எரிசுரம்வ யிற்றுப்
பொருமலப்பி சம்பறந்து போம்.

(அ.கு.)

தொண்டையில் கோழை கட்டல், குருதி வாந்தி, இருமல் ஈளை முதலியவை நீங்கும்.

இம்பூறல் லேகியம், இம்பூறல் வடகம் முதலியவைகளில் இம்பூரல் கொண்டு செய்யப்படு மருந்தாகும்.

Constituents: Root Constituet - Alizarin.

<u>இலவங்கம்</u>: Eugenia Caryophylcata. Eng: Cloves.

அஞ்சுகம், கிராம்பு, சோசம் எனவும் வழங்கப்படுகிறது. இசிவகற்றி, அகட்டுவாய் அகற்றி, பசித்தீத் தூண்டி முதலிய செய்கைகளை உடையது.

பித்த மயக்கம் பேதியோடு வாந்தியும்போம்
சுத்தவிரத் தக்கடுப்புந் தோன்றுமோ - மெத்த
இலவங்கங் கொண்டவருக் கேற் சுகமாகும்
மலமங்கே கட்டுமென வாழ்த்து.

(அ.கு.)

மயக்கம் பேதி, வாந்தி, குருதிக் கழிச்சல், கண்ணில் பூ படைகள் ஆகியவற்றை போக்கும். பல்வலி போக்க கிராம்புத்தைலம் பயன்படுகிறது.

அமுக்கிரா சூரணம், தாளிசாதி வடகம், கோரோச்சனை மாத்திரை, பழக்கிராம்பு, பக்குவ எண்ணை போன்றவற்றில் கிராம்பு பயன்படுகிறது.

Constituents: A heavy volatile oil 16 to 20 p.c. camphor resin 6 p.c., caryophyllin or eugenin - a crystalline sub stances, tanin, woody fibre, gum etc.

எருக்கு: Calotropin Gigentiea.

Eng: Mudar.

அருக்கன் என்றும் வழங்கப்படுகிறது. எருக்கம் பூ மாலை, பிள்ளையாருக்கு விசேசமாக அணிவிக்கப்படுகிறது.

ப.உ. இலை, பூ, பால், பட்டை, வேர்.

புழுக்கொல்லி, உடற்தேற்றி, மலமிளக்கி, வெப்பமுண்டாக்கிய முதலிய செய்கைகளை இலை உடையதாக உள்ளது.

கோழையகற்றி, பசித்தீ தூண்டி முதலிய செய்கைகளை பூ உடையதாக உள்ளது.

மன்னையுங் கையெடுக்க வைத்தெயிற்றி னோயகற்றி
யுன்ற பிணிப்பனியை யோட்டுதலாற் - சொன்னேன்
எருக்கெனவே பூமி யினிலே விளங்கும்
அருக்க மருக்கனென வாம்.

(தே. வெண்பா).

சுவாச குடோரி மாத்திரை, அண்ட எருக்கன் செம்நீர், அர்க்க- உஷ்ரத் தைலம் முதலியவற்றில் எருக்கு சேர்ந்துள்ளது.

முதிர்ந்த செடியில் இருந்து கிடைக்கும் பட்டையே மருத்துவத்திற்கு மிகவும் நன்று. வெயில் காலத்தில் இதை சேரிக்க வேண்டும். மேலும், பட்டையை 24 மணி நேரம் சென்ற பின்பு உரித்தெடுக்க வேண்டும்.

Contitents: Various principles, of the calrtropin bark and sapare - "Madar Albav, Madar Fluavil, Closely resembling the Alban and fluavil found in gutta - percha; Black acid resin, Caoutchouc, yellow bitter resins (active principles); Akundarin and Calotropin.

<u>தடுத்தாழ்:</u> Terminatia Chebula.

Eng: Chebulic Myrobalam, Ink nut.

கடுக்காயும், கற்ப மூலிகை தன்மை உடையது. தமிழ்க்குடும்பத்தில் குழந்தைகள் உள்ள வீட்டில் எப்போதும் கடுக்காய் இருக்கும்.

அபையா, அமுதம், திவ்யா, அரிதகு போன்ற பெயர்களாலும் வழங்கப்படும்.

ப.உ. பிஞ்சு, பழம்.

'கடுக்காய்க்கு அக நஞ்சு' --- கடுக்காயுள்ளிருக்கும், கொட்டையின் பருப்பு நஞ்சாகும். கடுக்காயில் பல விதை வகைகளுண்டு. கற்பமாகவும் பயன்படுகிறது.

துவர்ப்பு செய்கை, மலமிளக்கி, உடல் தேற்றி முதலிய செய்கைகளை உடையது. அறுசுவைகளுள், உப்புச் சுவை நீங்கலாக மற்ற எல்லாச்சுவைகளையும் இது கொண்டது. ஆகையால் இது முக்குற்ற நோயையும் போக்கும்.

கடுக்காயுந் தாயுங் கருதிலொன்றென் றாலும்
கடுக்காயத் தாய்க்கதிகங் காண்நீ - கடுக்காய் நோய்
ஒட்டி யுடற்றேற்றும் உற்றவன்னை யோசுவைகள்
ஊட்டியுடற் றேற்று முவந்து

என கடுக்காயின் சிறப்பு கூறப்பட்டுள்ளது.

மூலக்குகோடாரி எண்ணை, திரிபலா சூரணம், பூரப்பொடி, கடுக்காய் நெய், கடுக்காய் லேகியம் முதலியவை கடுக்காய் கொண்டு செய்யப்படுகிறது.

**Constituents:** Myrobalams contain, Astringent, principles, tanin, 4th p.c. and a large amount of gallic acid, lucilage, a brownish yellow colowring mattoo. Chebulinic acid which when heated in water splits up into tanic and gallicacids.

<u>வெட்டிவேர்</u>: Crews veltiveroides.

Eng: Cuscusgrass.

குருவேர், இருவேலி முதலிய பெயர்களாலும் அழைக்கப்படுகிறது.

ப.உ. வேர்.

உரமாக்கி, சிறுநீர் பெருக்கி, வெப்பகற்றி முதலிய செய்கைகளை உடையது.

பித்தவி தாகஞ் சசிகா மிலங்கறைப் பித்தமினற்
றத்திடு குட்டஞ் சிரநோய் களைமடி தாதுநட்ட
மத்தம னற்புண் டனைப்புண்வன் மூர்ச்சை வழிவிழிநோய்
வித்திர மேகத்தின் கட்டியும் போம்வெட்டி வேரினுக்கே.

(அ.கு.)

வெட்டிவேர், தாகம், காமாலை, குருதியழல், சுரம், கண்நோய் முதலியவைகளை போக்கும்.

அருகன் தைலம், நிலவேம்புக் குடிநீர், வாத, பித்தகுடிநீர் முதலியவற்றில் இது சேர்கிறது.

Constituents: A Volatile essential oil, resin, colouring matter, a free acid, a salt of lime, oxide of iron and woody matter

<u>கொடிவேலி</u>: Plumbago Zeylanica.
Eng: Ceycon lead - Wort.

சித்திரம், கருநாகம், கொடிவன்னி போன்ற வேறு பெயர்களாலும் வழங்கப்படுகிறது.

ப.உ. வேர்.

முறைவெப்பகற்றி, வியர்வையுண்டாக்கி , உடல்தேற்றி, பசித்தீண்டி முதலிய செய்கைகளை உடையது.

கட்டிவிர ணக்கிரந்தி கால்களி அரையாப்புக்
கட்டிச்சூ லைவிக்கங் காழ்சூலம் - முட்டிரத்தக்
கட்டுநீ ரேற்றங் கனத்த பெருவயிறும்
அட்டுங் கொடிவேலி யாம்.

கட்டி, விரணம், கிரந்தி, சூலை முதலிய நோய்களைப் போக்கும்.

பட்டுக்கருப்பு, ரசகாந்தி, மெழுகு, இடிவல்லாதி முதலிய மருந்துகளில் கொடி வேலி சேர்கிறது.

Constituents: Fatty oil, resin, mucilege, gum, protein compunds, malates and an essential oil to which the aromatic odour and taste is due. A valuable essential oil 'thymene' rich in Carvone obtained from the seeds, contein cuminol or cumic Aldehyde 56 p.c. a mixture of Hydro carbous, cymene, terpene etc.

<u>மிளகு</u>: Pepper, Nigrum.

'பத்த மிளகு' இருந்தால் பகைவன் வீட்டிலும் உண்ணலாம்' என்பது வழக்கு. நச்சுத் தன்மை நீக்குவதில் இது சிறந்து விளங்குகிறது.

கறி, மலையாளி, குறுமிளகு எனும் வேறு பெயர்களாலும் அழைக்கப்படுகிறது.

ப.உ. விதை, கொடி.

அகட்டுவாய் அகற்றி, முறைவெப்பகற்றி, வீக்கம் கரைச்சி முதலிய செய்கைகளை உடையது.

சீதசுரம் பாண்டு சிலேத்மங் கிராணிகுன்மம்
வாதம் அருசிபித்தம் மாமூலம் - ஓதுசந்தி
யாசமபஸ் மாரம் அடன்மேகம் காசமிவை
நாசங் கறிமிளகினால்.

(அ.கு.)

குளிர்சுரம், பாண்டு, கோழை, கழிச்சல், குன்மம், வாயு, செரியாமை, காமாலை முதலியவை மிளகினால் தீரும்.

Constituents: Root contains, en acrid, Crystalline, Principles called 'Plumbagin' in the form of yellow needles, melting at 72 C."

சீரகம்: Cuminum Cyminum.
Eng: Cumin seeds or Fruits.

சீர்+அகம் - சீரகம். அகத்தை சீர் செய்வது ஆகும்.

பித்த நாசினி, போசனகுடோரி, அசை எனவும் வழங்கப்படுகிறது.

ப.உ. விதை.

அகட்டுவாய் அகற்றி, பசித்தீ தூண்டி, துவர்ப்பி முதலிய செய்கைகளை உடையது.

வாந்தி யருசிகுன்மம் வாய்நோய்பி லீகமிரைப்
பேற்திருமல் கல்லடைப்பி லாஞ்சனமுட் - சேர்ந்தகம்மல்
ஆசனகு டாரியெனும் அந்தக் கிரகணியும்
போசனகு டாரியுண்ணப் போம்.

வாந்தி, பசியின்மை, குன்மம், பிலீகம், கல்லடைப்பு முதலிய நோய்களைப் போக்கும்.

சீரகம், சீரகச்சூரணம், சீரகத் தைலம், மயிலிறகாதி சூர்ணம், பஞ்சி தீபாக்கினி சூரணம், பித்த சுரக் குடிநீர் முதலியவைகளில் சேர்கிறது.

சுவாசகுடோரி மாத்திரை, திரிகடுகு சூரணம், சிவனார் அமிர்தம், திரிதோட மாத்திரை, பஞ்ச தீபாக்கினி லேகியம் முதலியவற்றில் மிளகு பயன்படுகிறது.

Constituents: A Volatile Alkaloid, piperine or pipirine 5 to9p.c. Piperidine or pyperidin 5 p.c. a balsamic voletile essential oil 1 to 2 p.c., fat 7 p.c. masocarp contains charicin, a balasamic volatile oil, starch, Lignin, Gum, fat 1p.c. proteids 7 p.c. and ash containing organic matter 5.p.c.

<u>வில்வம்:</u> Aegle marmeolos - Eng: Bael Tree.

சிவனுக்கு உகந்த மூலிகை வில்வமாலை இஃது இந்தியா முழுவதும் வளர்கிறது.

கூவிளம், சிவத்துருமம் போன்ற பெயர்களாலும் வழங்கப்படுகிறது.

இலை, வியர்வைப் பெருக்கி, காமம் பெருக்கி, வெப்பகற்றி செய்கையையும்,

பூ, பிஞ்சு, காய் - முதலியவை துவர்ப்பி, பசித்தீ தூண்டி முதலிய செய்கைகளையும்.

பழம்: துவர்ப்பு, பசித்தீ தூண்டி, மலமிளக்கி செய்கைகளையும் உடையது.

வில்லுவத்தின் வேருக்கு வீறுகுன்ம வாயுகபம்
சொல்வொணா பித்தந் தொடர்சோபை - வலகப்
தாகசுரம் நீரேற்றஞ் சந்நியொடு மெய்வலியும்
வேகமொடு நீங்குமே .

குன்மம், வாயு, கபம், பித்தம்,சோபை, தாக சுரம் முதலிய நோய்களை வில்வம் நீக்கும்.

பித்தசுர குடிநீர், வில்வாதி லேகியம், வல்லாரை நெய், வில்வ மணப்பாகு போன்றவற்றில் வில்வம் சேர்கிறது.

Constituents: The Pulp contains mucilage, pectin, sugar, tanin, Volatile, oil, bitter principle, ash 2% and a balasamic principle resembling balsam of peru. The wood ash contains potassium and sodium Compounds, phosphates of lime and iron , calcium carbonate, magnesum Carbonate, Silicia, Sand etc. Fresh leaves yield in distillation a yellowist green oil with a peculiar aromatic odous; marmelosin.

## மூலிகை (மருந்து) களும் - தாவரப் பெயர்களும்

| | |
|---|---|
| அதிமதுரம் | GLYCYRRMIZAE GLABRA |
| அத்தி | FICUS GLOMAVATA |
| அதிவிடயம் | ACONITUM HETEROPHYLLUM |
| அசுவகெந்தி | WITHANIA SOMNI FERA |
| அரசு | FICUS RELIGIOSA |
| அரத்தை | ALPINI GALANGA |
| அழிஞ்சில் | ALANGIUM ECAPETALUM |
| ஆடாதோடை | ADHATODA VASICA |
| ஆமணக்கு | RUCUBYS COMMUNIS |
| இம்பூறல் | OLDEULANDIA VUNBELLA |
| இலவங்கம் | EUGENIA CARYOPHYLLATA |
| இலவங்கப்பத்திரி | CINNAMOMUM TAMALE |
| இலுப்பை | BASSIA LONGIFOLIA |
| பேரீச்சு | PHOENIX DACTILIPERA |
| ஈச்சுரமூலி | ARISTOLOCHIA INDILCA |
| உத்தாமணி | DALMIA EXTENA |
| எருக்கு | CALOTROPIS GIGANTIEA |
| ஏலம் | ELETARIA CARDAMOMUM |
| ஓமம் | CARUM KOPTICUM |
| கஞ்சா | LANNABIS SATTVA |
| கடுகு (கருங்) | BRASSICO JUNCEP |
| கடுகுரோகிணி | PICRORRHIZA ,KURROOA |
| கடுக்காய் | TEMINALIA CHEBULA |
| கண்டங்கத்திரி | SOLANUM XANTHOCARPUM |

| | |
|---|---|
| சிறுதேக்கு | CLERODANDRON SERRATUM |
| கரிசாலை | ECLIPTA ALBA |
| கருணைக்கிழங்கு | TYPHONIUM TRILOBALUM |
| கரும்பு | SACCHARUM CFFICINARUM |
| கற்கடகசிங்கி | RHUS SUCEDENEA |
| கழற்சி | CAESAPINIA BONDUCELLA |
| கறி முள்ளி | ZOLANUM IIDICUM |
| கற்றாழை | ALOE VEERA |
| சங்குபுஷ்பம் (காக்கணம்) | CEITORIA TENANTEA |
| காட்டாமணக்கு | JATROPHACURCAS |
| கார்போகரிசி | PSORALIA CONYLIFOLIA |
| பாற்சொற்றிக்கீரை. | RUELLIA SECUNDA |
| புளியாரை | OXALIS KORNICULATUS |
| கீழாநெல்லி | PHYLLANTHUS NIRURI |
| குங்கிலியம் | SHOREA ROBUSTA |
| குங்குமப் பூ | CROCUS SATIVUS |
| குடசப்பாலை | HOLARRHENA ANTIDYSEN TERICA |
| வெட்பாலை | WRIGHEIA TINCTORIA |
| குமிழ் மரம் | GMELLNA ASIATICA |
| வெட்டிவேர் | COEUS VETTIVEROIDES |
| கொடிவேலி | PLUMBAGO ZEYLANICA |
| கொத்தமல்லி | CORIANDRUM SATIUAM |
| கோட்டம் | APAOTSCS ANTCUT |
| முத்தம் | CYPRUS ROTANDUS |
| சடாமாஞ்சி | VALERINAE RACHIZOMA |
| சங்கன் | AZIMA TE TE RACANTHA |
| சதகுப்பை | PEUCEDANUM,, GRAVEOLENS BERTH |
| சாரணை | TRIANTHEMA ECANDRA |

| | |
|---|---|
| சந்தனம் | SANTALUM ALBUM |
| சாதிக்காய் | MYRISTICA OFFICENALIS |
| சிவதை | IMPMEA TURPETHUM BR. |
| சிறுநாகப்பூ | MESUA PERRAE |
| சிற்றாமுட்டி | PAVONIA ZEYLANICA |
| பேராமுட்டி | PAVONIA ODORATA |
| சீந்தில் | COCCULVS CORD IFOLUIS |
| சீரகம் | CUMINUM CYMINUM |
| கருஞ்சீரகம் | NIGELLA SATIVA |
| பெருஞ்சீரகம் | PIMPINELLA ANISUM |
| சுக்கு | ZINGIBER OFFICINALS |
| தண்ணீர்விட்டான் | ASPARAGUS RACE MORSUS |
| தழுதாழை | CLERODENDRON PHLOMOIDES |
| தான்றி | TERMINALIA BELERICA |
| திப்பிலி | PIPPER LONGUM |
| திப்பிலிவேர் | CHAVICA ROXBURGII |
| முந்திரிகை | VITIS VINIFERA |
| துளசி | OCIMUM SANCTUM |
| தூதுவளை | SOLANUM TAILOBATUM |
| தேவதாரு | CEDRYS DEODARS |
| தேற்றான் | STRYCHNOS POTATORUM |
| நன்னாரி | HEMIDESMUS INDICUS |
| நாவல் | EUGENIA JAMBOLANA |
| நிலப்பனை | CURCULIGO ORCHIOIDES |
| நிலவேம்பு | AUDRAGRAPIS PANIC N LATE |
| நீர்முள்ளி | HYGROPHILA SPINOSA |

| | |
|---|---|
| நெய்ச்சிட்டி | VERNOIA CENEREA |
| நெருஞ்சில் | TRIBULUSTERRESTRIS |
| நெல்லி | PHYLLANTHUS EMBIICA |
| நேர்வாளம் | CROTON TINGLIUM |
| நொச்சி | VITEX NIGUNKU |
| பச்சிலை | ZANTHOCHYMUS PIOTCRLNS |
| நரிப்பயறு | PHASEOLUS TRILOBATUS |
| பச்சைப்பயிறு | PHASEOLUS MUNGO |
| பற்பாடகம் | MOLLUGO CERVIANA |
| பாதிரி | SETREOSPERMUM SUAVEOLESVS |
| பிரமி | VACCOPA MONIERI |
| சிறுபீளை | AERVA LANATA |
| புங்கு | PONGAMIA GLABRA |
| புடல் | TRICHOSANTHES ANGUINA |
| பெருங்காயம் | FERULA ASAFOETIDA |
| பொடுதலை | LIPPIA NODIFLORA |
| பொன்முசுட்டை | SIDA ACUTA |
| பொன்னாங்காணி | ALTER NANTHERA SESSILIS |
| மஞ்சள் | CURCUMA LONGA |
| மரமஞ்சள் | CONCINIUM FENESTRATUM |
| மஞ்சிட்டி | RUBIA CORDI FOLIA |
| மிளகு | PIPER NIGRUM |
| முசுமுசுக்கை | MUKIA SCAVRILLA |
| முந்திரி | ANACARDIUM OCCIDENTALE |

| | |
|---|---|
| முருங்கை | MORINGA PTERYGOSPERMA |
| வசம்பு | ACORUS CALAMUS |
| வல்லாரை | HYDROCOTYLE ASIATICA |
| வாய்விளங்கம் | EMBELIA RIBES |
| வாழை | MUSA SAPIENTUM |
| வில்வம் | AEGLE MARMEOLOS |
| விஷ்ணுகிரந்தி | EVOLVULUS ALSINOIDES |
| வெள்ளரிக்காய் | CUCUMIS SATIVUS |
| வெள்ளறுகு | ENICOSTEMMA LITTO RALE |
| வெள்ளுள்ளி | ALLIUM SATIVUM |
| வேம்பு | AZADIRCHATA INDICA |
| வேர் (கரு) | ACACIA ARABICA WILLD. |

## தாதுப் பொருட்கள்

### நூலில் காணப்படுவது - சில - விளக்கம்

சித்த மருத்துவத்தில் தாதுப் பொருட்கள் நான்கு வகையான பிரிவில் கூறப்பட்டுள்ளது.

1. உலோகம் - 11
2. காரசாரம் - 25
3. பாடாணம் - 64
4. உபரசம் - 120

ஆக 220 வகையான தாதுப் பொருட்கள் உள்ளது. இவற்றில் சில அதிகம் பயன்படுத்துவதில்லை. சில மருந்து தயாரிப்பதில் மிகவும் பயன்படுத்தப் படுகிறது.

**காந்தம்:**

காந்தம், அயத்தைக் காட்டிலும் மேன்மையானதாகும். இதனை இரும்பிரும் காந்தம் மேன்மை' என்னும் தேரன் கூற்றால் அறியலாம்

காந்தத்தாற் சோபைகுன்மங் காமிலமே கம்பாண்டு
சேர்த்ததில தோடவெட்டை சீதங்கால் - ஒய்ந்தபசி
பெருதரங் கண்ணோய் பிரமியநீ ராமையும் போம்
ஒரின்றை வாயுகுறும் உன்.

காந்தத்தால் விக்கம், குன்மம், காமாலை, வாத, பித்த, கபம்,

மந்தம் பெருவயிறு, கண் நோய் முதலியவை நீங்கும். ஆயுளும் உண்டாகும்.

காந்தத்தால் செய்த பாத்திரத்தில் பால் விட்டுக் காய்ச்சிக் குடித்து வந்தால் இரத்த விருத்தி ஏற்படும்.

சுத்தி செய்த பின்பு, மருந்து செய்வதற்குப் பயன்படுத்த வேண்டும் காந்தத்தைப் பொடித்து எலுமிச்சம் பழச்சாறு, புளித்த காடி, புளித்த மோர் இவைகளில் முறையே மும்மூன்று நாள் ஊறவைத்து வெயிலில் வைத்து கழுவி எடுக்க சுத்தியாகும்.

காந்தபற்பம், காந்தச் செந்தூரம், ஆறு முகச் செந்தூரம் முதலியவை, காந்தத்தைக் கொண்டு செய்யப்படும் மருந்துகளாகும்.

கல்லுப்பு

இது காரசாரங்களில் ஒன்றாகும். இது இயற்கையாக இசைப்பதாகும். சுத்திகாடித் தண்ணீர் பிசறி பிறகு ஈரத்தைத் துணியில் துடைத்து வெய்யிலில் உலர்த்திக் கொள்ளச் சுத்தியாகும்.

ஐயமறுஞ் சூலை யரோசிகத்தஞ் சத்தியொடு
வெய்யபிணி யட்டகுன்மம் விட்டேகும் - மெய்வளையே
வாதமதி தாகம் மலக்கட்டும் போமுலகிற்
கோதறுகல் லுப்பைக் கொடு.

என்று கூறப்பட்டிருப்பதினால், ஐயம், சூலை, பித்தம், வாந்தி எட்டுவகை குன்மம், அதிக நீர்தாகம், மற்றும் மலக்கட்டும் போகும் என அறிய முடிகிறது.

கல்லுப்புச் செந்தூரம், இலவணபற்பம், குன்ம குடோரி மெழுகு பஞ்சலவண பற்பம், முதலியவற்றில் கல்லுப்பு சேர்த்து செய்யப்படுகிறது.

## இந்துப்பு

இது பூமியிலிருந்து கிடைக்கிறது. அத்தி காடியில் மூன்று நாள் ஊறப்போட்டு, சூரிய ஒளியில் உலர்த்தி எடுக்கச் சுத்தியாகும்.

மலத்தை இளகச் செய்யும் செய்கை உடையது.

அட்டகுன்மம் மந்தம் அனிர்கபத்குர் சீதபித்தந்
சுட்டவையம் நாடிப்புண் போடங்கள் - கெட்டமலக்
கட்டுவிடு சிந்ததையக் காசிலநோய் வன்கரப்பான்
விட்டுவிடு சிந்துப்பை விள்".

எட்டுவகையான குன்மம், மந்தம், கபபித்தம், நரம்புப்புண், மலக்கட்டு, கரப்பான் முதலிய நோய்கள் இந்துப்பால் தீரும்.

இந்துப்புச் சூரணம், தேங்காய் வைகாரம், சங்கதி திராவகம் போன்ற திராவகங்களிலும் இந்துப்புசேர்கிறது.

## வெட்சாரம்

இது தாவரப் பொருளிலிருந்து பிரித்தெடுக்கப்படுகிறது.

வெள்ளாக்கு நீரில் 72 நிமிடம் நன்றாய் அரைத்து, வெயிலில் உலர்த்திக் கொள்ள இது சுத்தியாகும்.

குய்யம் களம்நா கொடிறவா யின்விடநோ
யைய மிரைப்பிரும லாசனப்புள் - பையவுற
கீடவிடு சோலை கிராணியையும் பம்பரம்போ
லாடவிடு மெய்யவச்சா ரம்".

கழுத்து, நாக்கு, வாய் முதலிய இடங்களில் உண்டாகும் நோய்கள் இரைப்பு, இருமல், எருவாயில் உண்டாகும். புண், விடம், சோபை

# உயிர்ப் பொருட்கள்

## கிளிஞ்சல்

கடலில் கிடைக்கும் பொருளாகும். சிறுகிளிஞ்சல், பெருங் கிளிஞ்சல் என 2 வகை உள்ளது.

கிளிஞ்சலை சுத்தி செய்த பின்பே உபயோகிக்க. கிளிஞ்சலினால், கிளிஞ்சல் மெழுகு, பற்பம், முதலியவை செய்யப் படுகிறது.

## கோரோசனம்

ரோசனம் - பித்த எனப் பொருள் படும்.

கோ - பசு - ஆகியவை, பசுவில் இருந்து கிடைக்கும் பித்த ஆகும்.

ரோசனம், கோமந்திரம், வச்சல மணி என்றும் வழங்கப்படும்.

## கோரோசனை இயற்கையா, செயற்கையா என அறிய சோதனை

ஒரு சிறிய ஊசியைப் பழுக்கக் காய்ச்சி, கோரோசனையில் குத்திப் பிடுங்கினால், மஞ்சள் நிறப் புகையுடன் ஊசியின் மேல் மஞ்சள் நிறம் பதியின் நல்ல சரக்கென்று அறியலாம்.

மலமிளக்கு, இசிவகற்றி, கோழையகற்றி, ஆகிய செய்கைகளை உடையது.

நீரிழிவு மேகசுர நீங்காக் கனல்வேகந்

சுரியலுல் மாதல் குழந்தைகள்நோய் - பாரகபம்

விறலை ஞாலும் போம் ...

மதுமேகம், பித்தாதிக்கம், குழந்தைகள் மாந்தம், அம்மை நோய் முதலியவை கோரோச்சனையால் நீங்கும். குழந்தை நோய்கட்கு கோரோச்சனை மாத்திரை சிறப்பாக பயன்படுத்தல் படுகிறது.

## சிறுநீர்

அமுரி, நீர் மூத்திரம் என்றும் அழைக்கப்படும். மிருகங்களின் சிறுநீர் மருத்துவத்தில் பயன்படுகிறது. பசுவின் சிறுநீர், வெள்ளாட்டு நீர் முதலியவை முக்கியமாக பயன்படுத்தப்படுகிறது.

## பசுமூத்திரம்

கோமூத்திரம் என்றும் அழைக்கப்படும்.

விடபாண்டு சோபைபல வீக்கஞ் சகல

விடமுதிர மாலையென மெத்தப் - புடவிதனிற்

பேசலகக கோமூத்தப் பிடை பகன்றிடுமே

கோசலத்தா லாரணங்கே கூறு.

பசுமூத்திரத்தில் விடப் பாண்டு, சோபை, வீக்கம் பற்பல விடம் முதலியவை நீங்கும்.

மூத்திரம், மருந்தாகப் பயன்படுவது மட்டுமின்றி, பலவித மருந்து களைச் சுத்தி செய்வதற்கும் பயன்படுகிறது.

வெள்ளாட்டு மூத்திரம்

சோபையொடு பாண்டுவைத்த ரத்தம் பலவீக்க
தாபமகற் றும்முதிரத் தைப்போக்கும் - கோபமுடன்
உள்ளாட்டுத் துர்ச்சதையோ டோங்குதர நோயகற்றும்
வெள்ளாடு மூத்திரமினி றைந்து

சோபை, பாண்டு, பற்பல வீக்கம், துர்மாமிசம் முதலியவையும் நீங்கும்.

தேன்:

தேன் மருந்தாகப் பயன்படுவதல்லாமல், உணவாகவும் பயன் படுகிறது. குழந்தைகள் முதல் பெரியவர் வரை அனைவரும் பயன்படுத்தலாம்.

உள்ளழலாற்றி, மலமிளக்கி, துவர்ப்பி, அழுகலகற்றி, கோழை கற்றி, பசித்தீதூண்டி முதலிய செய்கைகளை உடையது. கொம்புத்தேன், மலைத்தேன், என வேறுபாடுகள் உள்ளன.

இலேகியம், மெழுகு, கன்மை போன்ற மருந்துகள் செய்வதற்கும் தேன் உபயோகப்படுகிறது.

செந்தூரம், சூரணம், மாத்திரை, குடிநீர் போன்றவற்றிற்கு துணை மருந்தாகவும் பயன்படுகிறது.

தேனை வெளிப்பிரயோகமாக, கட்டி, புண், தீப்புண் முதலியவைகளுக்கு பயன்படுத்துவதும் உண்டு.

## வெள்ளாட்டு மூத்திரம்

சோபையொடு பாண்டுவைத்து ரத்தம் பலவீக்க
தாபமகற் றும்முதிரத் தைப்போக்கும் - கோபமுடன்
உள்ளாட்டுந் தாச்சதையோ டோங்குதர நோயகற்றும்
வெள்ளாடு மூத்திரமினி ரைந்து

சோபை, பாண்டு, பற்பல வீக்கம், தர்மாமிசம் முதலியவையும் நீக்கும்.

## தேன்:

தேன் மருந்தாகப் பயன்படுவதல்லாமல், உணவாகவும் பயன் படுகிறது. குழந்தைகள் முதல் பெரியவர் வரை அனைவரும் பயன்படுத்தலாம்.

உள்ளழலாற்றி, மலமிளக்கி, துவர்ப்பி, அழுகலகற்றி, கோழை அகற்றி, பசித்தீதூண்டி முதலிய செய்கைகளை உடையது. கொம்புத்தேன், மலைத்தேன், என வேறுபாடுகள் உள்ளன.

இலேகியம், மெழுகு, களிம்பு போன்ற மருந்துகள் செய்வதற்கும் தேன் உபயோகப்படுகிறது.

செந்தூரம், சூரணம், மாத்திரை, குடிநீர் போன்றவற்றிற்கு துணை மருந்தாகவும் பயன்படுகிறது.

தேனை வெளிப்பிரயோகமாக, கட்டி, புண், தீப்புண் முதலியவைகளுக்கு பயன்படுத்துவதும் உண்டு.

## பால்

அமுது, சுதை, பாகு என்றும் வழங்கப்படுகிறது. பாலில் முக்கால் அரைக்கால் பங்கு நீரும், மற்ற சருக்கரை, கொழுப்புப் பொருள்களும் உண்டு.

பாலில் உள்ள கேசின் மிக விரைவில் இரத்தத்தில் கலந்து கொள்கிறது. பாலில் உள்ள பாஸ்பரஸ், மற்றும் சுண்ணாம்புச் சத்தும், மூளையையும், சநரம்புகளையும் நன்கு செயல்படச் செய்கிறது.

உணவாக மட்டுமின்றி, மருந்தாகவும், பல மருந்துப் பொருட்களை, சாப்பிடுவதற்கு அனுபானமாகவும் பயன்படுகிறது.

பாலில் இருந்து பெறப்படும், தயிர், வெண் நெய் போன்றவை நமக்கு பல்வேறு வகையில் பயன்படுகிறது.

உறரி ஓம்

## வைத்திய சிந்தாமணி வெண்பா நாலாயிரம்

### கடவுள் வாழ்த்து

ஒருவாயி னால்வாய் மதனூன் றிலோர்
இருதாளின் முத்தா ளிசைய - வருமோர்
களிற்றை யினிதுரைக்கக் கல்வியிற் போற்றீர்
வெளிற்றை யினிதுரைக்க வே. (1)

தோற்றுமிம்ப ரும்பரெனச் சூழ்ந்தமர ராயிருப்பார்
சாற்றும் வைத்தியசிந் தாமணியைப் - போற்றியே
வெண்பாவாய் யானும் விளம்புதற் கென்னாவில்
வெண்பாவாம் மேவாய் விரைந்து (2)

எல்லாச் சமயத்தருக்கு மியாக்கையினை
யல்லால் பயனில்லை யாமாகில் - வல்ல
வைத்திய சிந்தாமணியை வாழ்த்த விமையோரும் (3)
வைத்தியரும் வானவருந் தான்

விளைந்த வியாதி நிதானம் விரகருளந்
தெளிந்த சுந்தரயோகங் - கிளர்ந்தமற்று
முள்ள நிதானஞ் சிகிட்சை யோகமுடன் சொல்வாமனது (4)
கொள்ள நிதானமுடன் கூர்ந்து.

## தியாழ வகை

## வாத சுர தியாழம்

1. தமுதாழை சங்கம்வேர் தான்றி கருநெல்லி
குழுவாங் கிராந்திவேர்க் கொம்பு - பழுதறவே
நேரா யிருநாழி நீரில்வைக்க யெக்கொன்றாய்ப்
பேராத வாதசுரம் போம்.

2. சீராருஞ் சந்தனமுஞ்[1] சீந்திலுகள் வேர்க்கொம்புங்
காராரு முத்தஞ்சிற காஞ்சொறிவேர்[2] - நேராக
கடுமே[3] யென்றுங் குடிநீர் குடிக்காமுன்
னோடுமே வாதசுர மோர்ந்து.

3. சீந்தில்முத் தஞ்சுக்கு சீரஞ் சொரிசந்து
போந்தமருந் தோரிபலமாம் பொங்குபுன - லாய்நாலிட்டே
யெக்கொன் றாக்காய்ச்சி யியல்போடு தானருந்தில்
விட்டுவிடும் வாதசுரம் வீழ்ந்து.

4. சுக்குத் தமுதாழை னா யா மணக்கம்வேர்
தக்க செருப்படிகூத் தன்குதம்பை - மிக்கவே
கோதமாய்க் காய்ச்சிக் குடித்திடவே வாதசுரம்
பேதமறப் போமே பிரிந்து.

5. ஆற்றுமுள்ளி பேரமாடி[4] யாத்தி யிலந்தைவே
ரேற்றுகடுக் காய்சுக்கோ டிவ்வாறும் - போற்றியே
சாடிதன்றி காய்குடிநீர் தங்காம வேகொடுக்க
வோடியிடும் வாதசுர மோர்ந்து.

6. காக்கா மணக்குசுக்கு கான் தமுதாழை
கட்டாந் திர்பலிகள் சுர்க்கன்ன - னீக்கடியவே
ரொன்குடி நீலறிக்கணத் தருண்டிடுகில்[5] வாதசுரம்
விள்ளடையப் போமே விரைந்து.

---

1. சந்தனமுஞ்
2. காஞ் சொறிவேர்
3. கட்டுமே
4. பேராமுட்டி
5. னா குண்டி டுகில்

7. வெட்டிவே ராலம் விழுது தமுதாமை
தக்குசுக்கு தாணிக்காய்த் தான்வில் - வெட்டு மஞ்சள்
காய்ந்தகுடி நீர்குடிக்கக் கண்டவளி[6] வாதசுர
மாய்ந்து விடுஞ் சொல்லாய் மகிழ்ந்து.

## பித்த சுரத்துக்குக் கியாழம்

8. சதகுபயை கொத்தமல்லி தன்னிவிட்டான் முத்த
மத்மதுரஞ் சுக்கோடா டாதோடை - யிழுசுக்கை
வெட்டிவேர் நேராக வெந்தகுடி ருர்குடிக்கக்
கெட்டுவிடும் பிரத்தசுரங் கேள்.

9. சீந்திகண்ட நன்னாரி சித்தமட்டி முந்திலகை
தேய்ந்தசாது பற்படாஞ் சேர்ந்தமுத்த - மாய்ந்துமே
நானாழி நீருலயாய் நாமருந்தப் பித்தசுரந்
தானாழிப் போமே தளர்ந்து.

10. கண்டஞ் சிறுதேக்கு காஞ்சொற்வேர் வெட்டிவேர்
தண்டுரித்த சீந்திசுக்குத் தானேராய்க் - கொண்டுநீர்
மெய்வெதும்பக் காய்ச்சி மென்பொடியாக திப்பிலிவிட்[7]
டைவெதும்ப வோட்ட வருந்து.

11. திப்பிலிவக் கத்திருப்பி பிலாம்பிச்சந் . . . .
தப்பி விருவேலி தஞ்சீந்தில் - பற்பகவும்
வேர்க்கொம்பு கண்டங்காரி வந்தகுடி நீர்குடிக்க
போர்க்குமே பித்தச்ரம் போம்.

12. சிறுதேக் அமுதவல்லி செந்தொட்டி கோட்டந்
தெறிசுக்கும் பற்படாந்த திப்பிலிபு - முறநிலத்தில்
இன்பமாந் தோடைமுத்த நேராய்க் குடிநீரை
நம்பிலே கொள்வீர் நயந்து.

---

6. கண்ட வறி
7. திப்பிலியிட்டிட

13. வெட்டாலை தோலரிசி வேர்க்கொம்பு பேய்ப்புடல்
கொட்பாற்செந் தொட்டிழுத்தங் கோஷ்டமுடன் - ஒட்பாக
பூநிம்பஞ் சீந்தில் பெருந்தோடை பற்படாந்
தானம்பித் தோடமருந் தான்.

14. வெட்டிவேர்பே ராமுட்டி வேர்சீர கஞ்சித்தா
முட்டிவேர் சிந்தில் முத்துழந்த - மட்டனைய
சுத்தக் கரும்பயறாஞ் சொல்குடிநீர் வைத்தருந்தில்
பித்தசுரம் போமே பிரிந்து.

15. கோஷ்டம் விலாமிச்சங் கூர்சந்த னஞ்சிந்தில்
நாட்டு சுக்கு முத்தூட னான் கோதம் - வாட்டியிடும்
பித்தசுர மத்தலையும் போந்துவிடு மிம்மருந்தை
யுத்தமமாய்ச் சொன்னே னுகந்து.

16. கொத்தமல்லி பேரமட்டி கோபிப்பாற் சோற்றிமுத்தம்
ஒத்தசுக்கு நெல்லிமுள்ளி யொன்று மனஞ் - சுத்தவிலாம்
பிச்சங் குடிநீர்க்குப் பித்தசுரம் பாறியிடுங்
கச்சினிள முலியாய்[8] கான்.

17. அரத்தை யதிமதுர மானசத குப்பை
நாப்பயற்றம்வேர் முத்த நலகரிந் - திருபுடஞ்சீர்
வெட்டிவேர் கோதுமையில் மேற்பித்த வெப்பகலுந்
திட்டமுறச் சொல்வீர் தெரிந்து

18. குறத்தபா சிப்பயறு கான்சீந்தில் மாஞ்சி
விறத்துமுத்தம் பேரமட்டி நீங்கா - துமதுரந்
தான்கூந் திருபுடசீரகங் கோதனங் கொண்டளவில்
மென்கோ பித்தசுர மீளும்.

---

8. முலியாள்

## சிலேத்தும_சுரத்துக்கு_கியாழம்

19. ஆடாதோ டையீர்க்கோ டாற்முள்ளி காஞ்முள்ள
காடாரு முள்ளுமட்கா வேளைவேர் - வாடாத
செம்முள்ளி யாங்குடிநீர் தேன்கலந்தூ ஊட்டருந்தில்
விம்மிப்போக் சேத்தும சுரம்[9] விள்ளு.

20. வாசையிலை பீர்க்கு வனக்கடுகு ரோகணியு
தேசுகண்டங் காரிவசம்பு சேர்பிரண்டை - மாரிசுக்கு
சேர்ந்தகியா முத்திவிற்தேன்[10] திப்பிலித்தூ ளிக்கருந்தில்
தேர்ந்துடன்போக் சேத்தும சுரந் தேம்ந்த.

21. ஞ ஆவளை முதந்[11] ஞ யகண்டங் காரிமுள்ளி[12]
கோதில்செம் முள்ளிவேர் கோத்தகத்திற் - றீவதெனத்
திப்பிலித்தூ ளிட்டருந்த சிலேட்டும்சுரம் போமதக்கு
தப்பிலைகாண்[13] மெய்யே தகும்.

22. சுக்குமுள்ளி கண்டத்தோ டையீர்க்கு றோகணியுஞ்
சிக்குமர மஞ்சள் திரிபலைபேய் - முதரிக்குபுடோல்
காட்டா மணக்கம்வேர் காய்ந்தகுடி நீருடன்ஞ்
கூட்டாப்போக் சேத்தும சுரந் கூற.[14]

23. ஓமம் வசம்புசுக்கு வோங்குகண்டங் கத்தியவேர்
நாமம்பெருங் குமிழ்வேர் நல்லசங்கு - யேமமுறங்
கையாந் தகரைநீர்[15] காய்ந்தகியா முந்[16] தனக்கு
மெய்யகலுஞ் சேத்தும சுரம் விள்ளு.

## வாதபித்த_சுரத்துக்கு

24. ஆமணக்கம் வேர்சீந்தி லான தமுதாமை
தாமணக்குங் சுத்தன் குதம்பை - தேமணக்கு
முத்தம்பாத் சோற்றி[17] நிறை மொய்குடிநீ ராம்வாத
பித்தவெப்பை யோட்டும் பிரித்த.

---

9. சிலேஷ்டுமசுரம்
10. கஷாயத்தினீர்
11. முழுதந்
12. கண்டங்கார
13. தப்பிலைகாண்
14. கூர்ந்த
15. தகரைனீர்
16. கிஷாயம்
17. சோத்தி

வாத_பித்த_சிலேத்தும_சுரத்துக்கு

25. காய்க்குந் திரிபலிகள் கான்கடுகு ரோகணியும்
வாய்க்கும்வேப் பீர்க்குசுக்கு வசீந்தில் - பேய்ப்பு[18]டோல்
ஏந்கும் குடிநீரை யேத்தருந்தி யோர்வாத
சேத்தும சுரம் போமே திகைத்து.

பித்த_சேத்ம_சுரத்துக்கு

26. விலாம்பிச்சங் கொத்தமல்லி வேர்க்கொம்பு கண்டத்
சுலாவுந்த திரிபலியாற் சோற்றி - குலாவியிடும்
செந்தொட்டிக் காய்குடிநீர் சேர்பித்தச் சிலேத்மவெப்பைச்
சிந்திடவே யோட்டுஞ் சிதைத்து.[19]

தொந்த_சுரத்துக்கு

27. கத்தன் குதம்பைசுக்கு கரிக்கடுக்காய் சீந்திமுத்தம்
பாத்தநில வேம்புநல்ல பாற்சோற்றி - யேத்தகுணம்
வந்ததொரு பேரமட்டி வன்குடிநீர் வாய்முகக்கத்
தொந்தசுரம் போமே தொலைந்து.[20]

சன்னி_பாத_சுரத்துக்கு

28. வாசை வளர்சீந்தில் மண்வேம்பு பற்படகந்
தேசாவரம் வேர்க்கொம்பு செந்தொட்டி - நேசமாய்ச்
சிற்றமுட்டி ரண்டுந் தேர்[21] மூன்று நான் கைந்து
மற்றநிறை யாய்யேழு மாம்.

29. ஏழும் பொடித்தே யெடுத்தே யொருபலத்தை
வாழுங் குடிநீராம் வாய்மடுக்கத் - தாழ்வான
வாதையொடு மூர்ச்சை மயக்கந் தளர்சன்னி
பாதசுரம் போமே பறந்து.

---

18. பேயப்புடல்
19. சினந்து
20. தொகுத்து
21. ரண்டிரண்டுந்தேர்

30. கானப் பெருங்குமிழ் வேர்கான சித்திரமூல
மான வரத்தை யழிக்கில்வேர் - தான் செவியம்
யேதமில்லாப் பேரமுட்டி யென்றகுடி நீர்கன்னிப்
பாதமதை நீக்கும்பரிந்து.[22]

## தருண சுரத்துக்கு

31. சந்தவிலா மிச்சமுத்தந் தன்சுக்குக் கண்டங்காரி
செந்தொட்டி வேம்பலகு சீந்திலொடு - நந்தசிவ
ரொட்டி[23] சுவர்க்கடுகு நம்பா திர்நீர்க்கு[24]
நட்டந் தருணசுர நாடு.

## பூராண சுரத்துக்கு[25]

32. பேரமுட்டி முந்திரிகை போவடுகில் பாற்சோற்றி
பார வமுதவல்லி பருஞ்சுக்கு - யேருந்
திராளிதருஞ் சீதா செங்கழுநீர்க் கோதம்
பூராண[26]வெப்பை யோட்டும் புகுந்து.

## பூரண[27] சுரத்துக்கு

33. சுக்கு மரமஞ்சள் சொல்வசம்பே லஞ்சந்து[28]
தக்கதொரு கண்டஞ் சூலமாங் - கக்குமணங்
காட்டுத் துளசி பெருமுட்டி யாங்காண
வீட்டுபூரண[29] சுரம்போ மென.

## அசீரண சுரத்துக்கு

34. திர்பலிவெண் சங்கம்வேர் சேர்கொடிய வேலி
யுரிய திர்கடுகோ கோமம் - பருவசம்பு
திப்பிலிமூ லங்குடிநீர் சேரு மசீரணமாம்
வெப்பகல வோடும் விரைந்து.

---

22. பாதசுரம் போமே பறந்து
23. சிவரொட்டி
24. நீர்க்கு
25. பூரண சுரத்துக்கு
26. பூரண
27. பூராண சுரத்துக்கு
28. சந்தி
29. பூராண

## தாப சுரத்துக்கு[30]

35. சந்தகோ ரைக்கிழங்கு தன்வெட்டி[31] வேர்சுக்குப்
பந்தி விலாமிபிச்சம் பற்படாம்[32] - வெந்தநீர்
காவிற்[33] குயின்மொழியாய் கண்டபொழு தேகுடிக்க
தாபசுரம் போயேகுந் தான்.

36. முந்திரிகை கற்பூர முன்கடுகு ரோகணியு
முந்தநெய்தல் பற்படக மோணசீந்தில் - இந்தனீர்[34]
தாகம் புலம்பல் தளர் முற்சை மெய் மயக்க
மாகவெப்போ டேபித்த மறும்.

37. வாசையிலை வில்வவேர் வன்கடுகு[35] ரோகிணியு
நேரமொடு முள்ளி நிலவேம்பு - ஆசையாம்
பற்படாங் கோதத்தி பாளிதமிட் டேகுடிக்க
வெப்புதாப சுரம்போம் விள.

## அஸ்தி சுரத்துக்கு

38. பேய்ப்புகோல் பற்படகம் பேரோ கிணிமுத்தம்[36]
வாய்ப்புடைய யேலச்சிந்தி வன்மையுள - தாப்பிரிய
மானசிறு தம்மட்டி வேர்குடிநீ ரஸ்திசுரந்
தானதபோங் கொள்வாய் தனித்த.

## ரத்த சுரத்துக்கு

39. வெள்ளறுகு பேரமுட்டி வேர்க்கொம் பசுவகெந்தி
விள்ளுங்கொ டிவேலி விரல்வசம்பு - கள்ளார்ந்
சிரத்த வளசவிலை யுள்குடிநீ ருண்ணி
விரத்த சுரம் போமே யிடைந்த.

---

30. தாகசுரம்
31. தன்வெட்டி
32. பற்பாடகம்
33. காவின்
34. கந்தனீர்
35. வனகடுகு (தாள் சுவடி)
36. பேரோகணி

### தோலில் பற்றிய சுரத்துக்கு

40. சொல்லுந் திர்பலைகள் சூழ்ரோ கணிசுக்கு
வல்ல[37] மனுபாலை மருட்கிழங்கு - கெல்லியிரும்
வேல்சந்தி முன்றமுட்டி[38] வெகுங்குடி நீரருந்தில்
தோல்பற் றியசுர மீபோந் தோற்று.

### விஷ சுரத்துக்கு

41. வெள்ளுள்ளி பேய்ப்புகோல் வேம்பீர்க்குப் பற்படகங்
முள்ளுகொடி வேலிசுக்கு பொன்முசுட்டை - யுள்ளதெல்லாம்
போட்டகுடி நீர்குடிக்கப் போக விஷச்[39]சுரம்
நாட்டமற போமே நடந்து.

42. செந்தொட்டி பற்படகஞ் சேர்வெயம் பெங்கணம் பூ
தந்த கொடிவேலி தழுதாழை - புகுந்தி
யடரு நிலவேம்பு சுக்குமான குடிநீர்க்கு
விஷசுரம் போமே விரைந்து.[40]

### விஷம சீதசுரத்துக்கு

43. தோற்று மனுபாலி அளசி பெருங்குறிச்சி
வீற்ற[41] விரன்முட்டி வேலஞ்சந்தி - யேற்று
மடலிவன்னி வட்டத் திரும்பியடு நீர்க்கு
விடமசீத சுரம்போம் விட்டு.

### தோஷ சுரத்துக்கு

44. கண்டங்கா ரிநெய்தலின் கந்த மமு தவல்லி
கொண்டங் கிருநாழி கோதமுழக் - குண்டவுடன்
வாத சிலேத் மமதால்[42] வந்த சுரதோஷந்
தீதகன்று போமே திகைத்து.

---

37. வெல்லம்
38. முன்றா முட்டி
39. விஷம் சுரம்
40. இந்தப் பாடல் இல்லாமல் உள்ளது.
41. வித்த
42. சிலேத்பமதனால்

45. வில்வவேர் நொச்சியிலை வெண்சங்கம் வேர்சுக்கோ
டோல கொடி வேலி யுமிரிவேர் - நல்கத்தன்
குதம்பை யிரண்டுந் தனிக்கோதந் தோஷசுர
முன்னடுங்க வோடு முனிந்து.

46. எருக்கம் வேர் சுக்குகண்ட மோவசம்பு சங்கு
செருப்படியின் வேர்குமிளிவேர் சேரு - விருப்பமாய்
காடமரும் பேரமுட்டி காய்ந்தகுடி நீர்குடிக்கத்
தோடசுரம் போமே தொலிந்து.

## திரிதோஷ சுரத்துக்கு

47. முத்தந் திரிபலை முள்ளிகண்டம் வெம்பலகு
கொத்தமல்லி சீந்திற் கொடிசுக்கும் - பித்தப்புடோல்
பற்பாடம் வாய்விளங்கம் பார்நெய்தற் பூரும்பந்
திப்பிலி மூலமின்னஞ் சேர்.

48. சேர்கடுகு ரோகணியுந் தேன்கலந்து கொள்குடிநீர்
தீர்வாதஞ் சேத்மந் திரிதோட - மூர்விட்டுக்[43]
காரார் குழலாய்க் கலன்பூனை மாமுலியாம்
பேராது போமே புலர்ந்து.[44]

## மாறல் சுரத்துக்கு

49. நயமா மசீரணமு நாளாளை மாறல்
மயமாரு மேசன்னி பாதம் - வயமா
புகலடைந்த வெம்பு மொழமாறல் முன்றம்
கடலடைந்து போமே கடிது.[45]

---

43. மூரவிட
44. புலைந்து
45. கடிந்து

## ஒரு மாறலுக்கு

50. பேரமுட்டி வேர்க்கொம்பு பீடு மதுபாலை
வேர சிரீவிலவேம்பு[46] திரிபலைகள் - பாரில்
வருங்கழிப் பாலிவேர் வைத்தகுடி நீர்க்கு
மொருமாறல் வெப்பகலு மோது.

## இருமாறல் சுரத்துக்கு

51. சீந்திமுத்தக் காசு சுக்கு சேர்ந்தகைப்பும் பேய்ப்பு போல்
சாய்ந்தசிறு தும்முட்டி தன்வேர்க - ளேந்தியிடும்
பற்படவம் கோதத்தில் பார்கனத்து ள் தேனுடனே
துய்ப்பவிரு மாறல்போந் தோற்று.[47]

## மூன்று நாள் மாறலுக்கு

52. முந்திரிகை பேரமுட்டி மொய்சகா தேவி சுக்கு
வந்தசிறு தும்முட்டி வனவேர்க - சிந்தநிலந்
தோன்று[48] பறங்கி துளசிகுடி நீருக்கு
மூன்றுமா றல்சுரம்போம் மொய்ம்பு

## நாலா மாறலுக்கு

53. பேரமுட்டி வேலசந்தி பேய்ப்புடோல் நற்செவியங்
கார்துளசி சுக்கினொடு நீ°கண்ணன்வேர் - பாரமது
பாலிவேர் போட்டகுடி நீர்குடிக்கப் பற்றுகின்ற
நாலுமா றல்சுரம்போ நைந்து.[49]

54. வெப்பீர்க்கு மூன்றுமுட்டி மிக்கநில வேம்புசுக்கு
தோப்பு நிலப்பனையின் சொல்கிழங்கு - மூப்புகொடி[50]
வேலிகியா முந்[51] குடிக்க வெப்பா மொரு மாறல்
மேலு மிருமாற லாம்.

---

46. சீரிவிலவேம்பு
47. தோய்ந்து
48. தொண்டு
49. மறைந்து
50. முப்புகொடி
51. கீழ்நாயம்

55. குன்றுமா றல்வேக நால்மாற வென்று
மஞ்சா மற்றிலிர வுதனின் – ஊன்றிவரும்
வெப்புமுத லாயுளதும் விட்டோடு மேதினியிற்
றப்புவாய் கொள்வீர் தணிந்த.

சீத_சுரத்துக்கு

56. காட்டு துளசிசுக்கு கான்வேலஞ் சுந்தி கன்ன[52]
னீட்டிய யே ராமுட்டி நீள்வேர்க – ளிட்டுசம
பாகங்கோ தத்தைப்[53] பருகசீத சுரம்போம்
வேகப்பழஞ் காச்சலும்போம் விண்டு.

57. சுக்குவேப் பீர்க்குச் சுடுவசம்பு வேலம்சந்தி
தொக்கியிரும் பேரமுட்டி சொல்வேர்கள் – மிக்கரசம்
பட்டை சமபாகம் பின்குடிநீர் தானருந்திற்
துட்டசீத சுரம்போந் தோந்து.[54]

58. சுக்கு நிலவேம்பு சொல்சீதா செங்கழுநீர்
தக்ககழிப் பாலிதன் வேர்கள் – மிக்க கன்னன்
வேர்க்குடிநீ ரிற்றேனும் விட்டுகணத் தா ருகனே
பார்க்கசீத சுரம்போம் பின்பு.

59. முட்டிரண்டு வேலம்சந்தி முத்த மிலந்தையிலை
பட்டசகா தேவிசுக்கு பற்பாடகம் – சிட்டின்ப
பொட்டிளவேர் தன்கூழ் பால்புகல் குடிநீ
குட்டிடச்சீ தசுரம்போங் கேள்.

சாயங்காலம்_வருகிற_சுரத்துக்கு

60. நெல்லிமுள்ளி பேய்ப்புகோல் நேரோ களிசுக்கு
வல்ல நிலவேம்பு மருக்கிழங்கு – நல்லகணம்
நெய்சிறிதம் முட்டிவேர் நீடுகயாழங் குடிக்கில்
சாயங்காலம் சுரம்போந் தாழ்ந்து.

---

52. சந்தி கன்ன
53. கோதித்த தைப்
54. தோர்ந்து

61. கிராந்தி சுக்கு வேலம்சந்தி கின்ற மனுபாலி
திராந்தகளை முன்முட்டி சீராய்ப் - பிராந்தி
வருகடுகு ரோகிணியும் வனகுடி நீர்கொள்ளி ரவில்
வருஞ்சுரம் போம் மிற்று.[55]

62. சுக்குக்கு ளம்பாலை சொல்சீதா செங்கழுநீர்
மிக்கசிறு தம்முட்டி வேர்மிளகு - தக்கபெரு
முட்டிமனு பாலி முதிர்குடிநீர் காலிரவிற்
றெட்டசுரம்[56] போமே தவிர்ந்து.

## சர்வசுரத்துக்கும்

63. முன்முட்டி ரோகணியு மோதந் திரிபலைச்சீ
கான்றகுத் தன்குதம்பை காலிரண்டு - மேன்ற
வுருதிமுத்தம் பார்சோத்தி யொன்மகுடி நீர்குடிக்க
சருவவெப்பும் போமே தணிந்து.

64. செவியஙீ கொடிவேலி சீந்திநில வேம்பு
குவியங்சி ராந்திவேர்க் கொம்பு - புவியி
லகவூமுட் காவேளை யருங்குடிநீர் வைக்கிற்
சகலவெட்பும் போமே சலித்து.[57]

---

55. மித்து
56. தோட சுரம்
57. தரித்து.

65. பேரமுட்டி சீந்திகண்டம்[58] பேசகுத் தன்ருதம்பை
வேரி நில வேம்பு வேப்பீர்க்கு - மாரவே
வெந்தகுடி நீரருந்தில் வேதனைசெய்[59] இன்ற
யெந்தவெப்பும் போமே யிசைந்து.

66. சீந்திசங்கம் வேர்சுக்கு சீரா மணக்கம்வே
ரேந்துகின்ற பற்படங் குமரிமுத்தங்[60] - காந்துகின்ற
பொல்லாக் கொடிவேலி போந்தகுடி நீர்குடிக்க
வெல்லாச் சுரங்களும்யேல் மென்.

67. கொன்றைப் பழத்தவித்து கொத்தமல்லி பேம்ப்புபோல்[61]
நன்றுசிறு காஞ்சொரி[62] நஞ்முத்த - மொன்றுசுக்கு
தப்பார் தொடையிர்க்கு சொல்குடிநீர் வைத்தருந்த
வெப்பெல்லா மோடும்[63] விரைந்து.

## சந்திக_சன்னிக்கு

68. சிறுகாஞ் சொறிநொச்சி சேரு மிரிவல்லி
பொறுபா[64] திரிபேய்ப் புடோலம்[65] - நறுஞ்சுக்கு
வெந்தேறு[66] கோதம் விரும்பியுண்ண வேவருத்தங்
சந்திக சன்னிகெடுந் தான்.

## அந்தக_சன்னி

69. வாநீதிம் பில்லுவம் வன்னெரிஞ்சி வேர்செவியங்
காஞ்சித் திறுலங் கைப்புபோல் - சூழ்கடுகு
வந்த திரிகடுகு வைத்தகுடி நீரருந்த
அந்தகமா சன்னிகெடு மாங்கு.

---

58. சிந்திகண்டம்
59. வேதனையேசெய்
60. பற்படகமேர்
61. பேய்ப்புடல்
62. காஞ்சொறி
63. மோட்டும்
64. பொறு
65. புடலும்
66. வெறுந்தேறு

## ருத்தாங்க_ சன்னி

70. வெண்சங்கம் வேர்கொடி வேலி கருஞ்சங்கு
பண்ணு மிரிகற்பந் தீப்படல — நண்ணுங்
குருக்கொங்குந்[67] தோல்சுக்குக் கொள்குடிநீர் கொண்டா
விருத்தாங்கச் சன்னிகெடு மென்.[68]

71. கையின்றி முன்னிக் கனிவிரைகா னொச்சியிலி
மெய்யின்றி கடுகாம வெள்ளுள்ளி — கொய்யுந்
திரிபலியோ டொன்குடிநீர் சேர்ந்தருந்த சித்த
பிரமசன்னி போமே பிரிந்து.

## சீதாங்க_சன்னி

72. பற்படவம் பேய்ப்[69]புடோல் பாரங்கி பண்ணுமிரி
திப்பிலிமூ லம்செவியந் சேர்வன்னி — யொப்பாந்
திரிகடுகோ டேகுடிநீர் சேரசீ தாங்க
மிறியசன்னி[70] போமே யுடைந்து.

## தாந்திரிக_சன்னி

73. நறைக்குருவே[71] ரீற்றோல் களோரி தேவதா ப
முருக்குபஞ்ச கோல முமிரி[72] — சிறக்கவே
மண்ணுகுடி நீர்தன்னி லொட்டடைத்தா ன்[73] மாடையிடை
தன்னிவிடத் தாந்திரிகம் போம்.[74]

## கண்டகுச்ச_சன்னி (கண்ட[75]குப்ச சன்னி)

74. பாதிரிவேர் வில்வவேர் பற்படவம்[76] பேய்ப்புடோல்
சோதிபெருங் குமிழ்வேர் சுக்குகண்டம் — வேதனையை
விண்டசெவி யங்குடிநீர் விள்ளவே சன்னியெனுங்
கண்டகுச்சம் போமே கரைந்து.

---

67. குற்க்கொங்குந்
68. மேந்து
69. சிதாங்க
70. முறிய
71. நற்க் குருவே
72. குமரி
73. லொட்டரைத்தா ன்
74. தாம் போமே
75. கண்டகுச்சம் சன்னி
76. பற்பாடகம்

## கர்லிக சன்னி[77]

75. அள்ளு கழுல மாரெருக்கம் வேர்கண்டந்
தெள்ளுமனு பாலை திரிகடுகு - விள்ளுந்
திறமுடைய முன்முட்டி சீர்குடிநீர் காய்க
கர்னிகமாஞ் சன்னிகெடும் காண்.

---

## புக்நேத்திர சன்னி

76. நொச்சியிலை முத்த நவலெருக்கம் வேர்சுக்கு
பச்சை நெருஞ்சிவேர் பற்பாடக - மிச்சையாய்த்
தொக்கு கழுலஞ் சொல்குடிநீர் சற்றருந்தப்
புக்கிநேத் திரமும் போமே.

## இரத்தட்டி சன்னி (இரக் தீட்டிவி சன்னி)

77. வல்லெருக்கம் வேர்சுக்கு வன்பா திரியின்வேர்
புல்லு திரியலைகள் போந்தகைப்பே[78] - சொல்லபுடோல்
வைத்தோட்டில் நீர்விடுத்த வன்குடிநீ ராயருந்த
ரதிதெட்டி சன்னிபோ மன்று.

## பிரலாப சன்னி

78. கழுவஞ் சீந்திசுக்கு[79] கைப்புடோல் வள்ளி
குளகுமிரி வேரழிஞ்சில் கள்வேர் - மணமார்
நிறமா மரமஞ்சள் நேர்குடிநீர் போடப்
பிறலாப சன்னிகெடும் பேசு.

## சிருவர சன்னி

79. சங்கிரன்கு முன்முட்டி சார்செவியஞ் சுக்கு
கழுலம் வளர்ந்தவள்ளி தங்காரைக் - கொங்குத்தோற்
கோதத்தில் கள்கனைத்து ள் ஞா வி யிடத்
தீங்குசிருவா சன்னி தீரும்.

---

77. கர்ணிகம்
78. போர்ந்தகப்பே
79. சிந்தி சுக்கு
80.

## அபிநியாச சன்னி

80. குன்றுமுட்டி சங்கிரண்டு முள்ளிரண்டு வன்னிகணந்
தின்றுகண மூலந் திரிபலைக - குன்றுசுக்கு
நேசவசம் பேசெவியம் நேர்குடிநீ ராமபிநியாச
சன்னியை யோட்(டி)டு மாயிந்தது.

## சர்வ சன்னிக்கும்

81. ஓமம் நிலவேம்பு வேராபேம்பு டோலகண
மேம தழுதாழை யின்வேர்கள் - ஞா மநிறம்
பற்படவங் கோதம் பருகச் சருவசன்னி
யப்பொழுதே யேகுந் தீர்ந்தது.

## திசூல கியாழம் (தசமூல கியாழம்)

82. முட்டி தழுதாழை முள்ளிகண்டம் பாதிரிவேர்
வெட்டுகாட் டாமணக்கு வேர்வில்வ - மட்டிடுங்குந்
தன்குதம்பை ரண்டுகுமிழ் தானாந் திசூலம்
பன்குடிநீர் சன்னி யறும் பாங்கு.

## பஞ்ச மூல கியாழம்

83. வில்வந் தழுதாழை வேர்பா திரிகுமிழ்வே
ரொல்லகாட் டாமணக்க மோரைந்தகு - சொல்லபஞ்ச
மூலமென்பார் கடமுறி சுக்குங் கோதமிடச்
சாலவே யேகியிடுஞ் சன்னி.

## அஷ்டமூல கியாழம்

84. முள்ளிகண்டங் கத்திரிவேர் குன்றுமுட்டி வில்லவேர்
தன்குதந் தன்குதம்பை தாலிரண்டு - வுள்ளவெட்டு
மட்டமூல மென்பர்க் குடிநீர் சுக்கு
மிட்டவுடன் சன்னியற மேந்தது.

## அஷ்ட தசமூலம்

85. சங்கிரண்ட மற்கந் தழுதாழை முன்னைமுட்டி
தங்குகண்ட முள்ளிநொச்சி தாள்முருங்கை - பைங்குமிழ்கூத்
தன்குதம்பை ரண்டுவில்வந் தாங்கு மனைபாலை
மன்னுமிரி பாதிரியாம் பண்பு.

86. பண்பா யுரைக்கும் பதினெட்டு மூலிகையு
நண்பாம் வடமொழியி னாட்டும்பே - ரொண்பாவா
பட்டதச மூலக் குடிநீர் சன்னியிதைக்
கிட்டாம லோட்டுங் கிளர்ந்த.

## பஞ்சகோல கியாழம்

87. திப்பிலிமூ லஞ்செவியஞ் சித்திரமூ லங்கணமோ
டொப்பரிய சுக்கொடு யாச்சியாய்ச்[82] - செப்பு பஞ்ச
கோலக் கியாழமெனக் கூறுவார் சன்னிசுரஞ்
சாலவே யேகியிடுந் தான்.

## வாந்தி விக்கலுக்கு

88. அதிமதுரங் கொத்தமல்லி யானைவில்வ மேலம்
பதியுமிலாம் பிச்ச மனைபாலை - மதிவடுவி
லென்றலவா மேமு மிசைந்தகுடி நீர்குடிக்க
வன்றுவிக்கல் வாந்தி யறும்[83]

89. இலவங்கத் தோலரத்தை யேலமனை பாலை
குலவுவிலா[84] பிச்சங்கரி மதுர - முலவுவில்வ
மிக்க சமன்குடிநீர் மெய்பாகத் தானருந்தில்
விக்கலுடன் வாந்தியும்போம் விண்டு.

---

81. அஷ்டா திச மூலம்
82. பற்சியாயாய்
83. யும்போமன்று
84. யிலவுவிலா

## தாகம் வாந்தி விக்கலுக்கு

90. திமிரு[85] மருக்கொழுந்து சீரகமும் கோட்ட
நிமிருமுது பாலைவேர்நேர் மதுரம் - மருவெட்டி[86]
கொத்தமல்லி கோதங் குடிக்கவந்தர தாகமுடன்
சத்திவிக்கல் தானும்போந் தாழ்ந்து.

## அந்தர தாகத்துக்கு

91. கோட்ட மதிமதுரங் கூர்விலாமிச் சம்வெட்டி
தேட்டமுள்ள கொத்தமல்லி சீரகங்கள் - நாட்டதனில்
வந்த சதாபிவிரை வன்குடிநீர் வைத்தருந்த
வுந்துமந்தர தாகம்போ முள்கு.

92. பாதிரியின் பூமதுரம் பார்தாம ரைவளையுங்
சீதநெல்லி யின்பருப்பு சீர்கோட்ட - மோதவிலாம்
பிச்சங் குடிநீர்க்குப் பேசுமந்திர தாகம்போ
முச்சிதமாய்ச் சொன்னா ருகந்து.

93. ஆவிச்சிநாவ லரசுமார மைந்தின றோலது
நீருஞ் சீரகமுஞ்சொல் மதுர - மேலாய்ப்
பொருந்துகுடி நீர்குடிக்கப் போகாம லின்ற
வருந்துமந்தர தாகம்போம் வாமிப்பு.

## சூலைக்கு

94. வெண்சங் கிலைமிளகு வீழுங் கலக்கொம்பு
பங்காயம் வெள்ளுள்ளி பார்சுக்கு - வன்மையுட
னோர்சம னாங்குடிநீர் நேர்ந்திடவே தானணுகும்
யோர்சூலை போகிவிடும் பொற்பு.

---

85. சிபிசு
86. அமுருவட்டி

95. வன்கரணைக் கந்தம் வசம்புசுக்கு வெள்ளுள்ளி
மின்முருங்கைத் தோல்திப் பிலிமூலம் - பன்னுவன்னி
வட்டத் திருப்பியெட்டும் வைத்தகுடி நீர்கரத்திற்
றொட்டவுடன் சூலைகள்போந் தோற்று.

சூலிக்கு

96. மட்டிரண்டு நன்னாரி மாகாளி வாரகி
யட்டிமது ரஞ்சுக் கூதரம் - வெட்டிவேர்
கோவிடுத்தஞ் செம்புளிச்சை கொள்தேன் விலாம்பிச்சை
சூலிவெப்புக்[87] கோதமெனச் சொல்.

அரையில் சுரத்துக்கு

97. சிற்றமுட்டி பேரமுட்டி சீந்திசுக்கு திப்பிலியு
மற்ற நிலவேம்பும் வைத்தநீர் - பெற்றங்காரி
பத்தரையின் வந்தசுரம் பாவை பருகிடவே
சுத்தமுற விட்டோடுஞ் சொல்.

மூர்ச்சைக்கு

98. நெருஞ்சி லசுவகெந்தி நேர்மற கடிதன
நரிய[88] பயற்றம்வேர் சுக்குநல்ல - தொருசதா
வேரிகத்தஞ் சீரகமும் வெந்தகியா முங்குடிக்க
சேருகின்ற மூர்ச்சைகள்போந் தேர்ந்து.

மத்தக் கிராணி ஆமவலிக்கு

99. சுக்குமுத் தக்காசு ஞா ய வதிவிடைலந் w
தக்க வமுதவல்லி தான்கூட்டி - யிக்குடிநீர்
மந்தவன்னி யாமவலி மாறாக் கிராணிக்குத்
மிந்தவகை போமென் றிசை.

---

87. சூலை வெப்புக்
88. நரிப்

100. சீந்தி லதிவிடையஞ் சேர்முத்தம் வேர்க்கொம்பு
காய்ந்த குடிநீர் கலந்துண் டீறி - யேந்திரவாம்
வைக்க வருசூழுதல் மந்தங் கிறாணியிவை
மிக்க வைந்து[89] நாளில் விடும்.

அசீரண மந்தசுவாச காசத்துக்கு

101. கண்டங் கணஞ்சீந்தில் காய்சுக்கு காய்ச்சியதி
லண்டு கணத்தை யரைத்ததனை - யுண்டவுடன்
வெப்பி லசீரணமு மெல்சுவா சங்காசந்
தப்பிலங்கி மந்தமும் போந் தான்.

அசீரண வலிக்கு

102. வறுத்த கழற்பருப்பு மாமிங்கு முள்ளி
தெளித்தசுக்கு வெந்நீரிற் சேரப் - பொறுத்தரைத்
தாதரவாய்க் கொள்ள வசீரணத்தோ டாமவலி
வாதவலி போமே மருண்டு.

தீபனத்துக்கு

103. ஓமங் கொடிவேலி யொன்சுக்கோ டிந்தப்பு
தாமங் கிளர்நொச்சி தங்கொழுந்த - நாமரைத்த
மோர்கரைத்துக் கா(ய்)ச்சி முகந்திட்டாற் றீபனமா
மாரமந்த[90] மோடு மகன்று.

பூச்சிக்கு[91]

104. முத்த மெலிச்செவியு முண்முருங்கை நல்லவேரு
மத்தந் திரியலையோ டாங்குடிநீர் - ஒத்தகணம்
வாய்விளங்க மேற்றுவி மாந்த வயிற்றிலுள்ள
தாம் விளங்கும் பூச்சி விழுந் தான்.

---

89. ஐந்து
90. மாறமந்த
91. திமிர் பூச்சிக்கு

வாத_வாய்வுக்கு

105. அங்கமெங்கும் வாத மழிக்குதென்ற மானிடர்கள்
பொங்கிக் கிடந்து புலம்பாதே - சங்கையின்றி[92]
வாசைவேர் சிந்தில்வேர் வைத்த குடிநீரோ
டாசை விளக் கெண்ணெ யருந்து.

சரு_வாங்க_வாதத்துக்கும்

106. கொள்முள்ளி கண்டங்கொ மட்டிமா துளைவில்வங்
கொள்சிறிய வாமனுக்கு சீனமூளை - யுள்வேர்க
ளிங்குத் திரிகடுகோ டெவச்சார மிந்துப்பு
தங்கியநீர் மேற்பொடியாந் தான்.

107. தானாமுன் வேராமுந் தளராத் திரிகடுகு
மானே குடிநீராய் வைத்ததன்மே - ஊ னமில்லா[93]
மும்மருந்து மேனு வி முகக்கவெழ[94] நாள்வாதம்
பம்முசரு வாங்கமும் போம் பார்.

பாண்டு_வீக்கத்துக்கு

108. கடுஞ்சீந்தில் சாரணைவேர் கானற் மரமஞ்சள்
பொடியாக்குங் குக்கிலியம் போட்ட - குடிநீர்கொள்
ளு ண்டு மாரவத்தந் தோல்தோட மேவீக்கம்
பாண்டுமுத லோடும் பறந்து.

109. சாரணைவேர் வெள்ளறுகு தான்கொன்றை வேர்சுக்கு
பாரணையுங் கையன்றிப் பன்பிரமி - வேர்வன்னி
யாகவே யேழுமதன் குடிநீர் வைத்தருந்த
வேகமுடன் வீக்கம்போம் விட்டு.[95]

---

92. சங்கையன்றி
93. ஊனமில்லா
94. முக்க ஏழு
95. விட்டு

110. வெஞ்சா ரடை[96] சுக்கு விழ்சத(ர)க் கள்ளியின்வேர்
பஞ்கா வெண் சங்கினிலை பார்கடுக்காய் - நன்புவன்னி
வார்கோதஞ் கோசலத்தில் வைத்திடவே வாதிக்குஞ்
சேர்பாண்டு சோகையும்போஞ் சேர்ந்து.

111. பிரமி திரியலைகள் போந்தகிட்டம் வன்னி
பரவுசுக்கு சாரணைவேர் பாங்காய் - நிரவு சமன்
றான்மருந்து கோசலத்திற் றப்பாமற் கோதமிட
மேன்பாண்டு சோயையும்போம் விண்டு.

112. இரண்டுமுள்ளி சாரணை வேரேர் பிரமிசுக்கு
பரந்தகடுக் காயரசம் பட்டை -மருந்தெல்லாம்
வெள்ளாட்டு மூத்திரத்தில் வெந்தகுடி நீரருந்த
வுள்பாண்டு சோபையும்போ முன்று.

சுரம் பாண்டு சோபைக்கு

113. பாரரசம் பட்டை பழங்கிட்ட மாஞ்சுக்கு
சாரணையா மோதந் தசமூல - மோகுடிநீ
ரேறியிடும் வெள்ளாட்டி னேர்மூத்தி ரத்தில் வைக்கப்
பாறியிடுஞ் சோபைசுரம் பாண்டு.

அதிசாரத்துக்கு

114. பெருமரத்தின் பட்டைசுக்கு பேசரிய முத்த
முரியவில்வ மாதளையி னோடு - தெரிய
பதிசா ரதிவிடையம் பான்யம் போட
வதிசார மோடு மலைத்து.

115. பொன்முசுட்டை கொத்தமல்லி போந்தசுக்கு பற்படவ[97]
மென்னுமிலாம் பிச்சமிருவேலி - நன்னீரிற்
சீந்தி விலவேம்பு செந்தொட்டி காய்ந்தகொள்ள
வாய்ந்தவதி சார மறும்.

---

96. சாரட்டை
97. பற்படக

116. அதிவிடைய முத்தமச மோதகஞ் சுக்குப்
பதிகுடசப் பாலைமேற் பட்டை - மதமாம்
பெருமரத்தின் றோல்குடிநீர் பேருமதி சாரங்
கருமவெப்பும் போமே கடந்து.[98]

117. அதிவிடையஞ் சுக்கோட முதவல்லி முத்தம்
புதியகுடசப் பாலைப்பூ நிம்பம் - நதிந்[99]
ருருகவே காய்ச்சி ருழக்காங் குடிநீர்
பருகவ திசாரம் படும்.

118. மாதளை வேரோடு மருவுமதி விடையங்
கோதங் குடசமுத்தங் கொள்சுக்குப் - போதருந்த
சீதவலி ரத்தமாய் சேருமதி சாரங்
காதவழி போமே கடந்து.[100]

119. மஞ்ச ளதிமதுரம் வளகுடசப் பாலைத்தோல்
தஞ்சு மரமஞ்சள் தோடையிர்க் - கஞ்சு
மதிசாரங் கொள்ள வருங்குடிநீர் கொள்ளில்
பதிசாரம் போமே பயந்து.

120. வில்வ நறுங்கனியும் வெட்டிவே ராத்திமலர்
கொல்யானைத் திப்பிலியுங் கொள்பூங்கி - னல்லதோல்
நெற்பொரித்து ணீ தேன்கூடில் நில்லா ததிசாரஞ்
சொற்பெரி யோர் பாலாக்குஞ் சொல்.

121. நன்னாரி பொன்முசுட்டை நாகசமு முத்தமொருடு
பன்னா ரமுதவல்லி பாம்குடிநீ - ரின்னிலத்தில்
வெப்பா மதிசார மேவிற் குடித்  தாக்காற்
றப்பாமற் போமே தளர்ந்து.

---

98. கடிந்து
99. மந்த நீ
100. கடிந்து

## பால அதிசாரத்துக்கு

122. காட்டாத்திப் பூவுங் கருங்காலி வேர்ப்பட்டை
கோட்டானைத் திப்பிலியுங் கவளைவேர் - கூட்டுநீர்
பால வதிசாரம் பருகியிடத் தேன்விட்டுக்
காலவதி சாரம்விடுங் காண்.

## அதிசார வீக்கத்துக்கு

123. சுக்குக் கொடிவேலி வ யமுத்தஞ் செம்புளிச்சை
தக்க சிறுதேக்கு(ச்) சாரணைவேர் - மிக்ககணந்
திப்பிலிமூ லங்குடிநீர் தேக்குதர னோய்வீக்கம்
வெப்பு ளதி சாரம் விடும்.

124. சுக்கு குளப்பாலைத் தோல்சீந்தில் பூநிம்பந்
தக்க விடையந் தரூமுத்த - மிக்க சமன்
செப்பு கியா மூங்குடிக்க(த்) தேக மதைவருத்தம்
வெப்பதிசா ரம்போகு மே.

125. மாம்பட்டை சுக்குமுத்த மாதளையி னல்லரும்புங்
காம்பட்ட வில்வக் கனிவற்றல - தேம்பு நில
வேம்பு பெருமரத்தோல் விள்ளுங் குடிநீர்க்குத்
தீம்மதிசார சுரம்போந் தீர்ந்து.

126. வில்வப் பழவற்றல் மென்மா தளையரும்பு
சொல்வகுட சப்பாலைத் தோல்சுக்கு - நல்லமாங்
கொட்டை பெருமரத்தோல் கூறுங் குடிநீர்க்குத்
தொட்டவதி சாரம்போந் சோர்ந்து.

127. காட்டாத்திப் பூமுத்தங் கானமா தளையரும்பு
கோட்டார் பெருமரத்தோல் கூவிளையி - னீட்டுகனி
வற்றல்குட சத்தோலை வன்குடிநீ ருண்டிடிசி
னூற்றவதி சாரம்போ மோடி.

128. ஜ த்ஜ ர வேர்சுக்கு சொன்மா தளையரும்பு
கோத்ஜ ர சாதிக்காய் குடசத்தோல் - சாத்ஜ ரு
முள்ளிலவந் தன்பிசினு மொயம்புகுடி நீர்குடிக்க
விரீஞுமதி சாரம்போம் விட்டு.

129. விடையங் குடசத்தோல் மென்சீந்தில்[101] சுக்கோ
டடவிகாட் டாத்திப்பூ வல்லால் - படிகடப்பந்
தோல்சாதி பத்திரிகை சொல்கியா முங்குடிக்க
மேலதிசார சுரம்போம் வின்.

<u>தோஷாதி சாரத்துக்கு</u>

130. சீந்தில் கழற்பருப்பு சீரம்வேர்க் கொம்பமுத்தம்
போந்த நிலவேம்பு பூவிடையஞ் - சேர்ந்த வில்வக்
கோடா கினிவற்றல் கள்குடசங் கோஜமுண
தோடாதி சாரம்போந் தோற்று.

131. கஞ்சவிரை வில்வங் கான்விடையஞ் சுக்கேலம்
பஞ்ச நிலவேம்பு படர்சீந்தில் - மிஞ்சு வில்வச்
செங்கனியின் வற்றல் திறல்வங்க(ப்) பத்திரிகோ
தங்களதி சாரம்போந் தாங்கு.

132. கத்தன் குதம்பை குடசத்தோல் சீந்திமுத்த
மேத்த நிலவேம்பு சுக்கே(ா)டேவிடையம் - பூத்தவில்வ
மோடார் கனிகஞ்சா வூற்றவிரைக் கோஜமுணந்
தோடாதி சாரம்போஞ் சொல்.

---

101. மேல்சிந்தில்

133. பெரு மரத்தோல் சுக்கூத்தம் பேர்குடசப் பாலை
யருமா தளையி லரும்பு - வருமா
விடையுங்காட் டாத்திப்பூ வின்குடிநீர் கொள்ளி
லடையுமதி சாரம் போ மன்று.

134. மாதளையின் பிஞ்சுசுக்கு மாவிடையஞ் சீந்திமுத்தந்
தாதவில்வஞ் செங்கனியின் றன்வற்ற - லோத சடா
மாஞ்சி பெருமரத்தோல் வஞ்சியா மங்குடிக்க
பாஞ்சிவதி சாரம் போம் பாங்கு.

135. முருங்கைத் தோல் வெள்ளுள்ளி மொம்மீபுசுக்கோ டோமங்
கடுஞ்சீர கஞ்சமமாய்க் கா(ய்)ச்சித் - தருங்கோத
நாலொன்றாய்த் தாலிருந்த நாடியதி லிந்தப்பு
மேல்குடசஞ் சுக்குவிடை யம்.

136. விடைய முதன்மருந்தை மேற்சமமாய்ப் போட்டுக்
கடுமை திரும்பவுந்தான் காச்சி - வடிகொண்டு
கொள்ளவதி சாரம்போங் கோதா யதிசாரத்
துள்ளெழுந்த சூலைபோ முன்.

## இரத்த பித்தத்துக்கு

137. முத்தம் விலாம்பிச்சை முங்கிலிலை வெட்டிவே
ரொத்தமா தளையரும்போ டொஞ்சுக்கு - நித்தமுறத்
திருக்குமென கத்திருனாங் நன்னாரி புடமாங்கோ
மிரத்தபித்தம் போமே யிவி.

## மூத்திர கிரிச்சரத்துக்கு

138. கொன்றை நறுங்கனியுங் குலாவுக்கு நொச்சிவேர்
துன்றுசிறு பூளை தொடையிலையு - மொன்றுதேன்
விட்டகுடி நீர்குடிக்க மெய்மூத் திரகிருச்சம்
தட்டிவிடு நீர் கடுப்புந் தான்.

## சிலேட்டும பிரமேகத்துக்கு

139. திரிபலைபேய்த் தும்மட்டி செம்புளிச்சை முத்த
முரியகுடி நீர்சிலேத்து மமோட்டும் - பிரமேக
மஞ்சஊட்ட பொடினவி மாஉசிகம் விட்டருந்த
வெஞ்சாம லோடியிடு மாம்.

## இருபத மேகத்துக்கும்

140. ஏலமில வங்கமிரு பாதிரி முத்தஞ்
சீலவிலாம் பிச்சைவேர் சீர்சந்து - சால
வருமுந் திரிவெட்டி வேர்கட்டி நீர்வைக்கி
லிருபதமே கங்களும் போ மிற்ற.

## சகல ரோகத்துக்கும்

141. கோட்ட மரத்தை கொடிவேலி நற்செவிய
நீட்டு கண் மூல நெருஞ்சி சுக்கு - காட்டசுவ
கெந்தி நரிப்பயற்றன் வேர்குடிநீர் கேட்டவுட
னெந்தரோ கங்களும்போ மேங்கி.

142. ஆற்றுமுள்ளி முள்ளி யலர்நெருஞ்சி வேர்சுக்கு
தேற்றுமர பாலை திரிபலைகள் - போற்று
மருவுஞ் சதகுப்பை வண்குடிநீர் காலில்
வருசகல ரோகமும்போம் வாடி.

---

102. மஞ்சள்

## கிருதம்

## சுத்திநெய்

143. வக்கிளிச்சி யுள்ளிருக்கும் வாரிசதைக ளோர்குறுனி
நன்வெள்ளைப் பூண்டுதிரி நான்குபடி - சொன்னரண்டு
மென்மரக்கா ளிரிவிட் டேகாய்ச்சி நாலொன்றா
யென்மையுட னேத்தி யிறுத்த. 1

144. இறுத்தவதில் நெய்குறுணி யோபசுவின் பால
நிறுத்தப் பதக்குவிட்டே நேர்மூளி - குறுஞ் சதரக்
கள்ளிப்பா விரண்டுபடி காறும் புளியரணை
புள்ளகந்த நீர்க்குறுணி யோர். 2

145. ஓர்கத்க[103] மிந்தப்போ டோங்குந் திரிகடுகு
வார்திப் பிஷ்லம் வன்செவிய[104] - மீர்சீரக[105]
மாம்பல வேதாச மாஞ்சித் திறுல
மேம்புசிறு நாகப்பூ வேலம். 3

146. ஏலமல்லாற் கோட்ட மிலவங்க மவ்விலைகள்
கோலகெச திப்பிலிகள் கொள்மதர - மால்பெரிய
காயம் புளியரணைக் கந்தந் திரிபலைகள்
ஆ யவெவட் சாரந் தடங்கு. 4

147. தடங்கும் வகைக்கிரண்டு ஆ யநிடக மாண்டா[106]
டெங்குபொடி[107] நெய்யதனி லிட்டே - மடங்கெரித்த
மேல்சிக் கனபதத்தில் மேன்மை யுடன்வடிக்கு
மாலசுத்தி நெய்பெயரா மாண்பு. 5

148. மான்பா யிதையருந்தின் மாமுத்தி ரக்கிரிச்சம்
வீண்பித்த பாண்டு விடபாகங் - கான்கரங்கால்
வீக்கஞ் செலகரி மீறுசயம் பித்தசுரந்
தாக்கு மகோதரம்போந் தான். 6

---

103. ஓர்கர்க்க
104. வன்செவ்விய
105. மிருசீரக
106. மிரண்டா
107. மிடங்குபொடி

<u>வறளாதி_குக்குலுநெய்</u>

149. முன்னை(க்) கொடிவேலி முக்குறட்டை சித்தமுட்டி
மன்னும் புன(ல்)முருங்கை மாவிலிங்கை - நன்னாரி
சித்தமல்லி புங்கு சிறுகுறிஞ்சி நொச்சிகண்டங்
கத்திரியின் பூறல்வேர் காண். 7

150. காஞ்சா ரணைவீழி காட்டிற் றமுதாழை
நீண்சிந்தித் தண்டு நிமிர்சடைச்சி - வான்முருங்கை
வேலந்தோல் பேய்ப்புடோல் வேப்பந்தோல் பேரமல்லி
கோலமழ வண்ணக் குறிஞ்சி. 8

151. குறிஞ்சியல் லால் வெள்ளறுகு கூர்பா திரியின்வேர்
பிறிஞ்சி பெருமருந்த பின்னுஞ் - சிறுகுறட்டை
கந்தஞ்செம் முள்ளி கருஞந்ச மூலமேல
வந்தமாட் டாங்கொடி மாண்பு. 9

152. மாண்பாம்பொன் வண்ண மழக்குறிஞ்சி யாம்வாசை
காண்வகைக் கோர் முன்றுபலங் கண்டித்துப் -பூண்முலையீர்
ஆ வி நீர் வார்த்தெரித்து(ச்)சொல்குறணி யாயேந்தி
வெண்ணெய்யு நானாழி விட்டு. 10

153. விட்டல்லாற் கற்கம் விடையு மிலவங்கங்
கட்டசிறு தேக்கு கடுகரத்தை - நட்டயிரு
சீர கங்கார் போகரிசி சித்திரமூ லஞ்செவியங்
காரசதக் குப்பைகடுக் காய். 11

154. காய்சாதிக் காய்தான்றி(க்) கச்சோலங் கல்லுப்பு
தேய்கோட்ட மிந்துப்பு தேவதரு - வேயு
மெவட் சாரம் வெப்பாலை யின்னரிசி கொத்தமல்லி
தவட்சீரமஞ் சட்டிதா னேர். 12

155. ஏர்சீனக் கார மெழில்கடுகு ரோகணிதான்
நேர்விளா வின்னரிசி நேருமிங்கு - சீர்செயி
திரிகுடுகு பேரானை திப்பிலிகள் சொன்ன
பெருங்குரும்பை தன்வகைக்காம் பேசு. 13

156. பேசியிடு முக்கழஞ்சு பேராவின் பால்குறுணி
முசியிடும் குக்குலவு மூன்றுபல - நேசமுட
னெல்லா மரைத்துடன்விட் டேயெரியிற் காய்ச்சியிறு
வல்லாண்மை தன்னால் வகுத்து. 14

157. வருத்தவன் ளாதி குக்குலநெய் வாரித்
தொகுத்தருந்திற் சேத்துமத்திற் சூழ்ந்த - மிகுத்தய்ய
மண்டைக் கிராந்திகண்ட மாலை பவுத்திரங்கள்
தொண்டைச் சிலந்திகடி தோடம். 15

158. தோடவிட பாகந் தொடர்மூல ரோகங்க
ணாடுசெவிக் கள்ளனலி கிரந்தி - கூடியிடுங்
கன்னகிரந் திகடிச் சலக மானபுண்ணுந்
தன்னிடத்திற் போமே தளர்ந்து. 16

<u>கடுக்காய் நெய்</u>

159. ஆனைகடுக் காய்நூறு மாங்கடுகு ரோகணியு
மீன திரி கடுகு மிந்துப்பு - நான கிட்டங்
காந்தபற்பந் தன்வகைக்குக் கான்பலங்க ளோரரையா
மேந்துமிரு சீரா மிரண்டு. 17

160. இரண்டல்லாற் கோட்ட மெழில்சாதிக் காயேலந்
திரண்ட திரிபலைகள் சேரும் - புரண்டசத
குப்பைவகைக் கோர்பலமாங் கொண்டசுத்தி நேர்வாளந்
செப்பும் வைந்துபலந் தேர்ந்து. 18

161. தேர்ந்த [108] வரபொடியுஞ் சீரொக்ப தாம்பலங்கள்
சார்ந்தசங்கு கையாந் தகரைபுளி - யார்ந்த
பிரமிகீழ் (க்) காய்நெல்லி பேருசி மல்லி
தரு ஊ த வளையேலந் தான். 19

162. தானாம் பொடுதலைகள் தன்னியி னீர்குமரி
யூனாருஞ் சாறுவளை யோர்முழுதந் - தேனே
யிடித்தப் பிழிந்தநீ[109] ரெல்லாம் வகைக்கு
விடுத்திடும் ராழி விரைந்த. 20

163. விரைந்தநெய் யூந்நாழி விட்டெரியிற் காய்ச்சி
நிரந்தரமாய்த் தான்வடிக்கு நெய்பேர் - தரந்தரிக
முள்ளகடுக் காய்நெய்யா முண்டவுடன் காமாலை
கள்ளவிடப் பாகம்போங் கண்டு. 21

164. கண்டபிடித்த பாண்டீளை காசம் விடப்பாகங்
கொண்டவெகு வீக்கங் குறிசோகை - யண்டுமிந்த
வேதனை நோய்தீரும் விரும்பியே யெவ்வுலகு
மாதனையே சொல்வாய் வகுத்த. 22

<u>பூசனிக்காய்</u>

165. பூசனிக்காய் நீர்முசுக்கை(ப்)[110] பூந்தா மரைவளையம்
வாசச் சதாவேரி வன்கரும்பு - தேசுடைய
வோரிலையின் றாமரைநீ ருற்றநெய்பா லோர்வகைக்கு
வார்குறனி கற்கம் வலிந்த. 23

166. வலிந்த சிறதேக்கு சுக்குவல்லி லப்பையின்பூ
மெலிந்த கமைரத்தை மேலாய் - பொலிந்த சந்த
நன்னாரி செண்பகப்பூ நற்சீர கங்கடுக்காய்
பொன்னா ரிலவங்கம் போற்ற. 24

---

108. சேர்ந்த பாடல். 163 - யுபிராழி?
109. பிழிந்த
110. முசுமுசுக்கை

167. போற்றுசிறு நாகப்பூ போந்தேலங் கொத்தமல்லி
சாற்று மிருவேலி சாதிக்காய் - தோற்றுவிலாமி
பிச்ச மதி மதுரை வேர்தாம ரைத்தாது
மெச்சுகொட்டி யின்கிழங்கு மேல். 25

168. மேல்சாத் திரவேதி வெப்பாலை யின்னரிசி
மாவழுத வள்ளியின் வன்கிழங்கு - சால்முந்
திரிகோட்டங் கற்கூரஞ் சேர்குங் குமப்பூ
வரிகடுகு ரோகணிதான் மன்னு. 26

169. மன்னு தவட்சீர் மருவு நவச்சாரந்
தன்னியிடு மஞ்சிட்டி சொல்வகைக்குப் - பன்னியிடு
முக்கழஞ்சி வீத முறைமை யுடனரைத்துப்
பக்குவமாய் விட்டெரியும் பாங்கு. 27

170. பாங்கு பதமாயிறக்கும் பகர்பூ சனிநெய்யைத்
தாங்கிச் சருக்கரையிற் றானுண்ண - வோங்கு பித்தந்
தாகநட்ட மெய்யிளைப்பு தான் கிர்ச்ச முள்வறட்சி
கோதிரத்த மேகம்போங் கூறு. 28

<u>இலந்தை நெய்</u>

171. இலைந்தை யிலையிழிந் ரீராறு நாழி
கலங்கெரியி னாலொன்றாய்க் காய்ச்சித் - தலங்கவியத்
தேயதனி னற்றபிர்க ளேற்றபடி முன்னான்கு
நேயபுளி யாரைநீர் நெய். 29

172. நெய்வகைக் கிரண்டுபடி நீங்குகற்க மிந்துப்பு
மெய்யகத்திப் பூண்டிய மேலோமந் - துய்யசிறு
மூலந் திரிகடுகு மோதிலவன் றன்பிசினுந்
சால வகைக் கோர்கழஞ்சாந் தான். 30

173. தாவேலஞ் சேர்த்தத் தகுமெரியி லிற்காய்ச்சி
யானயதன் வடிக்குமந் நெய்பேர் - மாறு
மிலந்தைநெய் யையுண்டிடுகி லேந்திழையா ரல்குல்
கலந்திரத்தம் வீழ்வதபோங் கண்டு. 31

## கண்டங்காரி கிருதம்

174. ஆற்றமுள்ளி வேர்றா டாதொடை யன்பான
தேற்றுகீற் காய்நெல்லி சேர்செவியந் - தோற்றுவகைக்
கையஞ்சு தூ தவளை யாறிரண்டு மேலரையா
மெய்நெருஞ்சி மூவிருகாண் மேவு. 32

175. மேவுசிறு தேக்கு மென்மூன்றின் மேவரைக்கால்
பூவலருந் தேவதரு பொன்முசுட்டை - தாவுகொடி
வேலி கணமுலம் நாய்வேளை வகைக்கைஞ்சு
கோலதொகை நற்பலமாய்க் கொள். 33

176. கொள்ளிதற்கு நாற்பங்கு கூறுசலம் விட்டெரித்து
மெள்ளநான் கொன்றாகு மேல்வடித்துத் - தள்ளுகுடி
நீரதற்கு நாலியொன்று நெய்யதனிற் சேர்த்திட்டே
யார்பிர மிசங்குகை யன்றி. 34

177. அன்றிலையி னீர்வகைக்கா யந்நெய்க்குத் தாலிரட்டி
யொன்றவிடு மேற்கற்க மொன்னுதலாம் - நின்றுபடர்
தூ தவளை தன்விரைப்பார் தொன்றுகண்டம் வேரினிற்றேல்
தீதறுக்குங் கற்கடக சிங்கி. 35

178. சிங்கியல்லாற் கோட்டமொடு சிற்றவரை யின்விரைநீண்
டெங்கும் படரேழி லம்பாலை - தங்கியநெய்[111]
யோர்நாழி யாம்வகைக்கே யொன்றவேமுக் கழஞ்சு
சேரிடித்துச் சூரணமாய்ச் செய். 36

---

111. தாங்கிய நெய்

179. செய்தபொடி மேற்றூ வி சீர்பெறவே யாக்குகின்ற
நெய்வடித்துக் கற்கமெல்லா நிக்கும்பே - ரெய்துகண்டங்
காரி கிருதமெனுங் காசினியோர் தங்கரத்தில்
வாரியுண வீக்கம்போம் வற்றி. 37

180. வற்றியபின் குன்மம் வயறூ தல் பீலிகைமெய்
யுற்றிரத்த சேற்ம முறூல - முற்று சயங்
காசஞ்சு வாசங்கள் காந்துகின்ற வன்மந்தம்
பேசிதைய ரோகம்போம் போந்து. 38

புளியாரைக் கிருதம்

181. புளியாரை நீர்நாழி பொற்பசுவி னெய்நாழி
நெளியாம ரமஞ்சனீள் செவியம் - விளியா
வகத்திப்பூ மஞ்ச ளதிவிடையஞ் சுக்குத்
தொகுத்தவில்வப் பிஞ்சுவறச் சுண்டி. 39

182. சுண்டியல்லாற் சொல்லவங்கத் தோல்வெட்டி வேர்சந்து
திண்டுவெள்ளி லோத்திரமாந் தேவதரு - விண்டமுத்தஞ்
செங்கழுநீர்த் தண்டுமதன் சேர்ந்தகந்தம் பொன்முசுட்டை
தங்குகொடி வேலியெவட் சாரம். 40

183. சார்வகைக் கோர்கழஞ்சாய்த் தக்ககற்கத் தூ குடனே
யாரவே யாக்கியநெய் யாமதன்பேர் - தூ யபுளி
யாரை கிருதமருந் தக்கிரானி பின்று
மோரைக் கழிச்சலும்போ முன்று. 41

அதிலேகிய கிருதம்

184. பாரின் முசுமுசுக்கைப் பச்சிலையி னீர்பதக்கு
நீரின்பா லோர்குறுணி நெய்குறுணி - சேரும்
பொருந்து மதிற்கற்கம் பூணுவிலாம் பிச்சை
திருந்து மதிமதரஞ் செப்பு. 42

185. செப்பு மிலுப்பைப்பூத் தேய்ந்தசந்த முந்திரிகை
பற்படவ மேலவங்கப் பத்திரிகை - யிப்புவிமா
னைந்தவெட்டி வேர்கோட்ட மேலமில வங்கஞ்சே
ரிந்தவகைக் கோப்பலமாய்த் தேர்ந்து. 43

186. தேர்ந்தவகைச் சூரணமாய்ச் செய்தநெற்யிற் றான்கரைத்து
ஆர்ந்த பதனறிந்தே யாக்கும் பேர் - பேர்ந்த
வகிலே கியகிருத மானவர்கள் கொள்ளிற்
றிகிலோ பயித்தியங்க ளீர்ந்து. 44

187. தீர்ந்து தலைசுற்றல் செங்கைகா லுள்ளெரிற்
மூர்ந்ததிரி கால்விழியா னுள்ளநோய் - போந்தவிடுந்
தேகம் பலக்குந் திருவனைய் ரீம்மருந்தை
மோகமுறத் தேடுவாம் முந்தி. 45

<u>கதகாதி கிருதம்</u>

188. வந்த திரிகடுகு வாழுந் திரிபலைக
ளிந்த வகைக்கரையா ெ(ய)ன்ற பல - மிந்தப்புக்
காற்பலந்தேற் றான்விரைகள் காணுபல நான்காநெய்
மேற்படி தா னென்றாம் விளம்பு. 46

189. விளம்புவிரை தான்பாலை விட்டரைத்தே யூற்றி
வளம் பெறநெய் வாகாய் வடிக்கு - முளயோக
நாமங் கதகாதி நற்கிருத நக்கியிடத்
தா மசய மேகியிடுஞ் சொல். 47

<u>கதகாதி புட்டி</u>

190. தா துவளை தன்கலியின்சொல் தேற்றான் வித்தி வகைக்
கோதுபல நால்காம்நெய் யோர்படியாங் - கோதுபடாச்
சர்க்கரையிரண் டாம்பலங்கள் சாற்றுந் திரிகடுகோ
டெர்க்குமிருஞ் சீரகமா முன். 48

191. உன்பலங்க ளொவ்வொன்றா மோசுதேற் றான்விரையைத்
தன்பாலி லேயரைத்துத் தாக்கரைத்துப் - பின்வடிக்கு
நெய்பெயரீ கதகாதி புட்டியதை நித்தமுண்ண
மெய்நோய் சயங்குணமாம் விள்ளு. 49

## அருத்தராதி கிருதம்

192. பண்ணிஞ்சி நீர்பதக்குப் பாலாழி நெய்நாழி
யெண்செவியந் திப்பிலியா மிந்துப்புத் - திண்ணாளை
திப்பிலியின் பூறல்வேர் சேர்சீரக மோமஞ்
செப்புகொடி வேலியாஞ் சேர். 50

193. சேர்வகைக் கோர்கழஞ்சாய்த் தீம்பாலிற் சேர்த்தரைத்து[112]
வார்பதவா யாக்கியநெய் வன்பெயர்க - ளா(ர)ருத்
திராதி கிருதநெஞ்சு சேர்மார்கோய் பாண்டு
கிராணிசயம் போக்கிடுமாங் கேள். 51

## வாசாதி கிருதம்

194. வாசையிலை நீர்சூலம் வளராவின் பாலினத்துக்
கோசைநான் காநெய்யு மோரிரண்டு - பேசும்
படியளவாச் சேர்த்துப் பகருமினி கற்கந்
தொடியிரண்டு திப்பிலியாஞ் சொல். 52

195. சொல்லு மெவட்சாரஞ் சுக்குக் கொடிவேலி
வல்லகெச திப்பிலியாம் வன்னித்த - புல்லும்
பலமரையாந் தன்வகைக்குப் பன்பொடி மேற்று வி
நல்லநெய்தா னாக்குபத நாடி. 53

196. நாடிவடிக் கொண்டதற்கு நன்னாமந் தாஙுரைக்கிற்
கேடிலாவா சாதி(க்) கிருதமதைத் - தேடிக்
குடிக்கச் சயமருசி கூறவல்லை பாண்டோ
டடிக்குசுரங் கிருமியாம் பின். 54

---

112. சேத்தரைத்து

197. பின் சுவா சங்காசம் பேராத வாய்வும்போய்த்
தன்னுடலம் புட்டியுமாஞ் சந்ததமுந் - தன்வயிற்றிற்
றீபனமு முண்டாகுந் தீராச் சயமுத
லாவனவும் போமா மலைந்து. 55

(வேறு) வாசாதி கிருதம்

198. வாசை சுருலம் வளர்பலங்கண் முவெட்டி
வேச மு(ட)ன்பதக்கு நீர்விட்டே - மாசகல
வெட்டொன்றாய்க் காய்ச்சி யிறுத்தகுடி நீரதி(ல்)னெய்
திட்டமுட விரண்டுபடி சேர். 56

199. சேருந் திரிகடுகு தின்செவிய மாஞ்சிதேவ
தாரு திரிபலைக டன்னெரிஞ்சி - வேரு மஞ்சள்
முந்திரிகை யிந்துப்பு முத்தம் விளாலரிசி
தந்தவிடு சீரகமாந் தான். 57

200. தானசுவ கெந்தி கந்தந்தாங் குங்கொடி
கான கற் கடகசிங்கி காழ்கோட்ட - மென்கார
பாரங்கி ச(ர்)க்கரைகள் பன்வகைக்கா முக்கழஞ்சு
நேர்வரைத் தேகரைப்பாய் நின்று. 58

201. நின்றெறியிற் காய்ச்சி நிலைமை பெறவடிக்கு
நன்று நறுநெய்க்கு நாமமேனு - மென்றுபின்னே
கேளுநிவா சாதி கிருத மதையருந்தில்
குளுசயம் போமே முறிந்து. 59

சதாவேரி கிருதம்

202. ஆதி சுருவியாம் பையசுவ கெந்தி
சோதி நிலப்பனையின் சூழ்கிழங்கு - நீதி
யிலவம் பிசின்வளுக்கோ றென்று வைந்து
பலம் படிநீ ரெட்டிரட்டி பார். 60

203. பார்கயா முங்கள் படியிரண்பாய்த் தாளிறத்த
வார்தனிநெய்[113] பால்வகைக்கு ரண்டு - நீர்நாழி
பூசனிக்கா யொன்றிலவிள போந்தநீர் கடவிட்டுத்
தேசடருங் கற்கவகை சேர். 61

204. சேர்விலாம் பிச்சுவெட்டி சேர்ந்தசடா மாஞ்சிசந்த
தேர்குட்ட மேலந் திரிபலைகள் - சீர்மதுர
மாரு மிலவங்க மாந்திரையங் கற்பூரம்
பேருவகைக் கோர்அட்டாம் பேசு. 62

205. பேசும்பா ளிதமெட்டாம் பின்பலஞ்சேர் நூ வேமிசெய்
யாகில் சதாவேரி யாங்கிருதம் - நேசமுட
னேந்திபுனக் கைகா லெரிவிரத்த பித்தமவல்
காந்தபிர மேகடும்போங் காண். 63

(வேறு) சதாவேரி கிருதம்

206. தந்தசத மூலியிஞ்சி தண்ணீர் நறுசெய்யும்
விந்தை யுடன்சமனாய் விட்டெரிக்கு - மந்தநெய்யைப்
பத்தியமா யுண்டிடுகிற் பாறியிடுஞ் சத்திகுன்ம
மொத்தசதா வேலிநெய்யே ரோகம்.[114] 64

சரபித்தாதி கிருதம்[115]

207. வாய்விளங்கங் கோட்ட மதுரம்வேர்க் கொம்புத்து
ளாநெய்யிற் றூ விக்கை யாந்தகரைத் - தூய் சாறும்
வார்கா செடையிரண்டு வன்முருக்கம் பூவிரண்டு
சீர்நற் பணவிடையாஞ் சேர். 65

208. சேர்த்தத்தான் காய்ச்சித் திறமாய் வடித்தநெய்யே
ரேத்த சர பித்தாதி நெய்கிருத - மாத்தி
நசியமிடப் பீனிசம்போ நானிலத்தோர்க் கெல்லா
மொசியுமிடை நல்லா யுரை. 66

---

113. வாரதனில்நெய்
114. பெயரோகம்
115. பீனிசத்துக்கு சரபித்தாதி கிருதம்

## கூட்பாண்ட கிருதம்

209. பூசணிக்காய் நீர்நான்கு போந்தமரக் கானெய்பால்
பேசுவகைக் கோர்குறுணி பின்கற்கந் - தூ சுசுக்கு
சிற்றரத்தை கார்கோளி சீர்காகோ ளிசந்த
முற்றுசிறு தேக்கேல முத்தம். 67

210. முத்தமல்லா விந்து முதிர்திப் பிலிமூலம்
வைந்தவிலாம் பிச்சைவேர் வன்மதுர - முத்தா
மணிவேர் திரிபலைகள் கணமால பற்படவந்
திணிலவங்க மந்நிலைகள் சேர். 68

211. சேர்பாலை வெட்டிவேர் தேர்ந்த யிருகணங்கள்
வார்தண்ணீர் விட்டான் வருகிழங்கு - மோர்வகைக்கா
மோர்பலமாம் பாலிலரைத் தூ த்தியே நற்கருப்ப
நீர்படிநாள் காம்விடுவாய் நெய்யில். 69

212. நெய்யை யெரித்திறுத்து நீங்காமற் றாலருந்தின்
மெய்யிளைப்புக் குன்மபித்த மென்சயங்கள் - வெய்யசுரந்
தீர்ப்பா மருந்தீடு சேரப்போ மிப்பெயர்கள்
கூழ்ப்பாண்ட மாங்கிருதங் கூறு. 70

## சம்பகணமந்தக் கிருதம்

213. சீதேவி செங்கழுநீர் சேரு முக முசுக்கை
மாதேச மூலம் வகையொறுக்குப் - போதப்
பிழிந்த ரசங்குறுணி பின்பசுநெய் பாலு
பிழிந்திலத்துக் கோர்குறுணி யேந்து. 71

214. எந்தமிள நீரேழிற் சதாவேரி யின்னீ
ராந்திலத்துக் கோர்நான்கா மானபடி - சேர்ந்த கற்கம்
வெட்டிவிலாம் பிச்சைவேர் வெண்ணிலப் பைப்பூவேல
மட்டிமது கங்கோட்ட மாம். 72

215. ஆமிலவங்க மந்நிலைக ளாரிந்தபே ரீந்தகனி
தேமுந் திரிக்கனிகள் தேய்ந்தசந்த - தோமகலம்
பற்படவ மோர்வகைக்குப் பன்று பலமொன்றா
மொப்பமுடன் பாலிலரைத் தா த்த.[116] 73

216. ஊத்தி யெரித்தே யுடன்வடிக்கு நெய்யருந்தி
லேத்தசய மத்திரை மேறபித்தஞ் - சேர்த்த கரங்
காலெரிவு மெய்யிளைத்தல் காசந் தலைச்சுற்று
மேலணுகும் வாய்வும்போம் விள். 74

217. விள்சத் துவமுண்டாம் வீரியமும் விர்த்தியா
முள் பரிசந் தாலுந்தா னோக்கவுண்டா - மொள்ளியபேர்
சம்பகண மந்தமாஞ் சத்திருத மாமிது தான்
னும்பருக்கு முகைலமா போசு. 75

<u>பஞ்ச கவ்விய கிருதம்</u>

218. கோமுத்தி ரந்தயிர்நெய் கூறியிடுஞ் சாணியின்னீர்
றேமுர்பால் னான்குபடி சேர்வகைக்குத் - தாமோதங்
கற்க மெஞ்சதரக் கள்ளியின்வே ரிற்றோல்கள்
தக்கசிறு நாகப்பூ தாங்கு. 76

219. தாங்கு திரிகடுகு தான்றிப் பில்மூல
மோங்குந் திரிபலைக ளோர்வகைக்குப் - பாங்கு பல
மோரொன்று கட்டி யுவந்தவடித் தநெய்பேர்
சீரொன்று மாமுலையாய் செப்பு. 77

220. செப்புபஞ்ச கவ்வியங்கள் சேர்கிருதந் தானருந்தில்
வெப்புகா மாலை வெகுசோபை - யுப்பியிந்த
பாண்டு மகோதரங்கள் பன்னியிடு முன்மாதந்
தா ண்டுமலக்[117] கட்டும்போஞ் சொல். 78

---

116. தா த்தி
117. தண்டு மலக்

## கதலிகந்த கிருதம்

221. வாழைக் கிழங்குநீர் வன்பசுவி னெய்பால
மாழைவகைக் கோர்குறணி யாவிடுத்து - வீழகற்கஞ்
சந்தன மரமஞ்சள் சார்திப் பிலிமூல
முந்திரிசா ஞ ரீச்சாத மொய்ம்பு. 79

222. மொய்ம்புவிளா வோடு முதிரு மதிமதுரம்
வெம்பு விலாம் பிச்சைவேர் வெட்டிவேர்-நம்பியிடுஞ்
சீத விருட்சமைஞ்சு சேர்துளிவா ழைக்கிழங்கு
மோதுவகைக் கோர்பலமாம் மோர். 80

223. ஓர்குர ணங்கலந்தே யுற்றநாள முன்றெரித்து
நேர்மை யுடன்வடிக்கு நெய்பெயர்கள் - சீர்கதலிக்
கந்தக் கிருதமதைக் கையேந்தி யுண்டிடுகில்
வந்தசுர மேழும்போம் வாய்ந்து. 81

224. வாய்ந்த தலைசுற்று வஞ்சுத்தி ரக்கிரிச்சங்
காய்ந்தகரங் காலெரிவு காமபித்தந் - தேய்ந்துடன்போ
மெத்த பசியுண்டா மெய்யிற்பலங் கொடுக்கு
முத்தமமாங் கண்டே யுணர். 82

## மகா கல்லியாண கிருதம்

225. பூசணிக்காய் வெள்ளரிக்காய் பொற்பிளநீர் நற்கரும்போ
டாசைவா ழைக்கிழங்கோ டாத்தியிலை - கூசுபுளி
யாரையா வாரையிலை யின்னீர் பிழிந்துகொண்டு
வேரையுறு தண்ணீர்விட் டான். 83

226. விட்டான் முசுமுசுக்கை வேரமுத வள்ளிகந்த
நெட்டா லவிழுது நிலப்பெண்ணைத் - திட்டமுத்த
நன்னாரி செங்கழுநீர் நற்கிழங்கு பேய்ப்புடோல்
பொன்னாங்கா ணிருங்கைப் பூ. 84

227. பூந்தா மரைவளையம் போந்தகரு நெய்தல்
சேர்ந்த யிருவேலி சிறுக்கீரை - சீந்திகொடி
செப்பு நெரிஞ்சி திகழ்விலாமி பிச்சைவேர்
தப்போ ரிலைவனசு[118] சொல். 85

228. சொல்கயா முங்கணுன் சொன்னநீ ருங்கலந்து
செல்பசுவி னெய்யுடனே சேர்த்தெரிக்கில் - வல்லகற்கங்
கோட்ட மதிமதுரங் கொத்தமல்லி கச்சூரங்
காட்டி லவங்கயிலை காண். 86

229. காண்கூகை நீறு கஸ்முந்தி ரிப்பழங்கள்
புண்திப் பிலிலவங்கப் பூவேலந் - தோணும்
புறப்பிசின்சீர் சாதிக்காய் போற்று மிருசீரா
முற்சூர ணங்கலந்தே யுற்று. 87

230. உற்று வடித்தெடுக்கு மோர்மகா கல்லியாண
நற்கிருதப் பேரிதையே நக்கிலிடச் - சற்சை
பிருபதினான் டாம்போகா தோமேக மோடுந்
தருசுழற்சிப் பித்தமும்போஞ் சாய்ந்து. 88

(வேறு) பஞ்ச கவ்விய கிருதம்

231. ஆவின்பால் முன்னாழி யானதயி ரைஞ்ஞாழி
கோவினெய்தா னானாழி கூர்சாணி - மேவிடுநீ
ராழி நற்பாலை யேத்தசீ தேவிவகைக்
கோராழி சாறா முனர். 89

---

118. ரிலைவன

232. உளராவல் லாரையின் ருற்றநா ளாழி
யினர்செவி விளநீ ரிரண்டாம் - குளநாழி
குன்றிமணி வேர்மதுரம் கோரோ சனைசந்த
கன்றிவிரி செங்கழுநீர்க் கந்தம். 90

233. கந்த முதலெல்லாங் காய்ச்சி வடித்திடுநெய்
யந்த பஞ்சகவ்வியங் கிருதம் - வந்தபெய
ருண்ண வுதர முடம்புகரங் காளெஞ்[119]
சின்னெரிவு[120] நெஞ்சுநடு நாக்கு. 91

234. நாக்கில் வெடித்தகவு நஞ்சுபிச்சி விட்டநஞ்சும்
வீக்கங்கா மாலை விடப்பாகந் - தாக்குபித்த
மாறல் வெப்பு மத்தி சுர மாறாச் சயங்களும்போந்
தேறுமிது கண்டீர் தெரிந்து. 92

(வேறு) பஞ்ச கவ்விய கிருதம்

235. நூ லீவிதியின் கூடு நவலபஞ்ச கவ்வியத்தில்
மால்மதுர முந்திரிகை வாய்விளங்க - மேலீவசம்பு
யேல மரமஞ்ச ளேர்கடுகு[121] ரோகணிகள்
கோலத் திரிபலைகள் கூறு. 93

236. கூறியிடு மஞ்சள் கொடிவேலி மஞ்சட்டி
நாறுமுத்தம் வெப்பாலை நல்லரிசி - மீறியிடும்
வட்டத் திருப்பி வளராடு நன்னாரி
நெட்டிலையின் வாசையா நேர். 94

237. நேரா யொருகழஞ்சு நேர முடன்வகைக்குச்
சீரா யிடித்துவிட்டுத் தீயடுப்பி - லேரா
யெரித்திறக்கு மாங்கிருத மேருலகின் ஞானம்
பரிக்குபஞ்ச கவ்வியமாம் பார். 95

---

119. காளெஞ்சில்

120. நன்னெரிவு

121. ளோடுகடுகு

238. பாரு மிதையருந்திற் பாவம்போம் பிள்ளையுண்டாஞ்
சேரு மழகுவருஞ் செல்வமுண்டாஞ் - சீருலகி
னூ ரு வயதிருப்பார் நோய்செய்பூ தக்கிரக
மேறுந்தே வக்கிரகமே கும். 96

## சட்பல கிருதம்

239. ஏறுபஞ்ச கோல மெவட்சாரஞ் சூரணத்திற்
கூறும்பா லொன்றுபடி கூட்டியுநெய் - யாறுபலம்
விட்டுப்பால் சுண்டுமட்டு மேயெரித்தக் காய்ச்சியிறுத்
திட்டமுடன் கொள்கவுசை தேர். 97

240. தேர்பாண்டு வல்விமந்தஞ் சேர்காச மட்டகுன்ம
மேர்சூலை வாயுவெல்லா மேகியிடும் - பேரிதுதான்
கேள்சட் பலகிருதங் கிள்ளைமொழி மானனையீர்
நாள்பொருந்த வேயருந்தாம் நாடி. 98

## குக்குல கிருதம்

241. வேப்பந்தோல் சீந்தி விளங்குகண்டங்[122] கத்திரிவேர்
பேய்ப்புடோல் வாசைப் பறங்கிதனை - நேர்ப்பாய்ப்
பதக்குநீர் தன்னிலிட்டுப் பாகமாய்க் காய்ச்சி
மிதக்க நான் காம்படியே வேண்டி. 99

242. வேண்டியிதிற் கற்கம் விளாலரிசி யிந்துப்புத்
தீண்டுசத குப்பை செவிய மஞ்சள் - மாண்டகொடி
வேலி யெவட்சாரம் வெப்பாலை யின்னரிசி
கோலவசம் போமங் குறி. 100

243. குறிசிவதை வேர் சுக்கு கோட்டம் விடையந்
தெறிகடுகு ரோகணி மஞ்சட்டி - நறுஞ்சீரம
பொன்முட்டை தேவதரு போர்கெச திப்பிலிகள்
மின் விளங்கஞ் செம்பாலை வேர். 101

---

122. விளங்குகின்ற

244. வேரந்த மாம்வகைக்கு வேண்டுங் கழஞ்சொன்றா
மோருக் குலவுந்தா னீரொன்பான் - சேர்கழஞ்சு
நெய்படிக ளையுழக்கி லேகவரைத் தேவிட்டு
மெய்யனலிற் காய்ச்சியே மேல். 102

245. மேல்வடிக்கு நெய்யதின்பேர் விளகுக் குலகிருத
மால்பெறவே யுண்டிடுகில் வன்சிலந்தி - தோலெலும்பி
லோடியிடும் விப்பிருதி யோர்குட்டஞ் சீழ்சிரங்கு
நீடுந் தழுதனைபோ நீங்கி. 103

<u>அசுவகெந்தாதி கிருதம்</u>

246. அசுவகெந்தி கந்த மடுபலமுன் னான்கோ
டொசியுமுபை யமல்லி யுளிவேர் - பசுமையுள்ள
நன்னாரி தண்ணிவிட்டா னறிகிழங்கு பேரமட்டி
கொன்னார்[123] நெரிஞ்சிவேர் கூறு. 104

247. கூறுவகைக் கோர்பலங்கள் கோதில்நீ[124] ரெண்காலி
லூ றவைத்தக் காய்ச்சியே யோர்பதக்காய் - மீறிடவே
யேந்திப்பா னெய்படிக ளோவகைக்கோர் நான்குவிட்டுச்
சேர்ந்தகொத்த மல்விசிற தேக்கு. 105

248. தேக்கல்லாற் கச்சோலஞ் செவ்வள்ளி யின்கொடிக
னீக்குந் திரிகடுகு நேர்மாஞ்சி - ஏ க்கும்
விளங்கஞ்சா அற்சாதம் விளசரள தேவதரு
துளங்குடுகு ரோகணியாஞ் சொல். 106

249. சொல்ல மரேணுகங்கள் சூரணங்க ளேர்க்கவிட்டு
நல்லபத மாய்க்காச்சு நற்கிருத -மெல்லவுண்ணத்
தீத நவசுரங்கள் தீரா விடப்பாண்டு
சீதசுரங் காசமும்போந் தீர்ந்து. 107

---

123. கொன்றான்
124. கோதில நீ

250. தீர்ந்தல்லால் மேவிளைப்புத் தீங்குவிட மச்சுரங்கள்
சோர்ந்ததாச் செய்யுஞ் சுவாசங்கள் - பேர்ந்தவிடு
மிந்தக் கிருத பேரசுவ கெந்தாதி
யெந்துலகுஞ் சொல்லா யெதீர்த்து. 108

திப்பிலியாதி_கிருதம்

251. ஆ துவளை கண்டந் துளசிவில்வ நன்னாரி
யாதளைசெந் தொட்டி யருங்குன்றி - யோதுகுமிழ்
மட்டிரண்டு கானெரிஞ்சி வாசையொனுக் கோர்பத்து
திட்டபல மென்கானீர் சேர்த்து. 109

252. சேர்த்தெரித்து நற்குடிநீர் சீர்குறுனி யாய்வடித்துப்
பார்த்துநெய்க ளோர்படிவார் பாலொன்று - யேர்த்தபடி
விட்டுவெகு நாள் பழைய வெல்ல நாலி கைந்து பல
மிட்டுடன்மேற் கற்க மியம்பு. 110

253. இயம்புகண்டஞ் சுக்குபல மேவகைக்கோ ரைந்து
முயங்குசிறு தேக்குபல மூன்று - வயமதரம்
வல்லிசமொவ் வோரொன்று வன்பலங்க ளாமரத்தை
சொல்லும் பலமிரண்டாந் ஆ க்கு. 111

254. ஆ க்குநறுஞ் சீரகங்கள் சூழ்ந்த பலமிரண்டு
தாக்குகண மூலந் தருமாஞ்சி - நோக்குவகைக்
கோரரை மஞ்சட்டி யுள்கரிய சீரகமும்
பார்வகைக் கோர்பலமாம் பண்பு. 112

255. பண்பு திரிபலைகள் பல்கற் கடகசிங்கி
நன்பு தவட்சீர்[125] நற்கோட்ட - மன்புகழு
முந்திரியே ரீந்துகனி மோதழுதிர் கொத்தமல்லி
யிந்தவகைக் கோர்பலமா மே. 113

---

125. தவக்ஷீரம்

256. மேலுமிந்தச் சூரணத்தை மெல்லவிட்டுத் தான்கிளறிக்
கோலுபடி யொன்றரைத்தேன் கூடவிட்டுச் - சால
வலியபத னாயிறக்கும் வன்கிருதப் பேர்திப்
பிலிகொள் சயம்போமே பேசு. 114

(வேறு) திப்பிலியாதி கிருதம்

257. முள்ளிகுமிழ் வேர்சித்த முட்டிகண்டங் கத்திரிவேர்
தெள்ளுசிறு காஞ்சொறி சின்னெரிஞ்சி - விள்ளுவில்வந்
தூ துவளை வாசை துளசியுவாய் பாதிரிவே
ரோதுமொவ்வோர் நான்குபல மோர். 115

258. ஓர்நா ழி யின்பதக்கா முற்றுநீ[126] ருத்தியிட்டு
நேர்குறுணி யாய்க்காய்ச்சி நெய்பாலு - நீர்தேங்காய்
பால்வகைக்கு மோர்குறுணி பாங்காய் விடுத்தரிய
மேல்கற்கந் திப்பிலியாம் விளி. 116

259. விள்ளேலஞ் சிங்கி விடைய மதிமதுர
முள்செவிய மாஞ்சி யுயரரத்தை - புள்ளு
மிலவங்க மல்லிலைக ளேந்துஞ் சிறுதேக்கு
நல்திப் பிலிமூல நாடு. 117

260. நாடுமிரு சீரகங்க ணல்ல திரிகடுகு
வாடியிருங் கத்தரியின் வன்மஞ்ச - ணீடு
திரிபலையொவ் வோர்வகைக்குச் சேர்ந்த பலமொன்று
திருபொடியும் பாளிதந்தென் றாள். 118

261. தானோர் படிவகைக்குச் சார்ந்ததெல்லா மட்டிடுநெய்
வான்திப் பிலியாதி வன்கிருதம் - பான்மொழியீ
ருண்டாற் சயமருசி யோடியிடு மத்திசுரங்
கண்டாற் கடல்புகுமே காண். 119

---

126. மூத்த நீர் - மூலச்சுவடியிலும் முதலில் இவ்வாறு
எழுதி பின் திருத்தி முற்று என்றுளது.

## கதகாதி_கிருதம்

262. விந்தையுள்ள தேற்றான் விரைசரீக் கரைவகைக்குத்
தொந்தபல மோரிரண்டாந் தூ துவளை - தந்தகனி
யென்பலங்க ளாவின்பாலொ பசுவி னெய்வகைக்கே
யொன்படிக ளோரிரண்டா மோது. 120

263. ஓதியிடுஞ் சாதிக்கா யுனதிப் பிலிமிளகு
பேதயிரு சீரகங்கள் பேர்வகைக்கு - நீதபல
மோரரைமுன் வித்துகனி யொக்கவேப் பாலிலரைத்துத்
தேரவிடுத் தெல்லா மெரித்து. 121

264. எரித்துபத மாய்க்கற்கத் தோடிறக்கி யேந்தி
யருத்திபூணக் காசசய மத்தி - சுரத்துடன் போ
நெய்பேர் கதகாதி யாங்கிருத நேசமுடன்
வைவேல் விழியணங்கே வாழ்த்து. 122

## (வேறு) அருத்திராதி_கிருதம்

265. இஞ்சி முசுமுசுக்கை யின்னீர் வகைக்கொன்றுபடி
தஞ்சு மரத்தை சுயகோத - மிஞ்சியப்பா
னெய்யுமொவ் வோரொன்றா நித்த தொகைபடிக
ளுய்யு மதிமதர மோது. 123

266. ஓது கணமொவ்வோ ரொன்றுபலஞ் சீரகங்கள்
த்தில் பலமிரண்டாஞ் சேர்பொடிக - ளேதமில்லா
யித்தனையு நா லிவிதியே யெயடுப்பில் வைத்தெரித்தே
யுத்தபதங் கண்டுவடி யொத்து. 124

267. ஒத்து வடிக்கு முயர்கிருத முன்கவிக்கல்
கஸ்த்தி யிருத்தரோ கங்களுடன் - சத்தியும் போஞ்
சேர்ந்தநெய் பேராருத்தி ராதி கிருதமென்ப
ரேந்தூலை மானே வியம்பு. 125

## லட்சுமி கிருதம்

268. நறுந்தாளி நல்லிலையை நைய வரைத்தே
சிறதேங்கா யவ்வளவு சேர்த்தே - பெறுமதனிற்
பாலுநெய்யு மொவ்வோர் படிவிடுத்தே லந்தொடிகளி
சாலவொன்றா பித்தனையுந் தான். 126

269. தான்காய்ச்சி யேயிருக்குந் தன்னெய்யை யுண்டிடுகில்
மேன்சயங்க ளத்தி சுரம் விட்டேகும் - வான்கிருதப்
பேர்லட் சுமிகிருதம் பேராத பித்தமும்போ
மேருலகிற் சொல்வா யிசைந்து. 127

## நயன சஞ்சீவி கிருதம்

270. உற்றயசும் பானெய்யு மொவ்வோர் படியொன்ற
நற்ற மதிமதுர நற்கோட்டம் - வெற்றேலஞ்
செண்பகப்பூ வெட்டிவேர் சேர்ந்தபொன்னாங் காணிவேர்
வெண்விலாம் பிச்சைவேர் விள்ளு. 128

271. விள்ளுங்கா ரம்பிசிறுக் கீரை வேர் வகைக்கா
முள்ளநிட்க மோர் நான்கு முச்சிதமாய் - மெள்ளப்
பதமாய் வடித்திருக்கும் பன்கிருதப் பேர்க
ளிதநயன சஞ்சீவி யென். 129

272. என்று மகுமுக வேகஞ்னி னுள்வருத்த
மன்று படலமறை காசம் - பின்னையுந்தான்
றொன்னூ ற்றா றுள்ளநோய் தோற்றுவிடுங் கண்விளங்கு
மென்னூ ற்றாங் டாம்வயது மேத்து. 130

## நூல் பொருள்

## வைத்திய சிந்தாமணி வெண்பா

## கியாழ வகை

### வாத சுர கியாழம்

1. தழுதாழை, சங்கம் வேர், தான்றி, கடுக்காய், நெல்லி, விஷ்ணு கிரந்தி, இஞ்சி ஆகியவற்றை ஒன்றிரண்டாக சிதைத்து, இரண்டு நாழி நீருடன் சேர்த்து, எட்டில் ஒரு பாகமாக செய்த குடிநீரால் வாத சுரம் நீங்கும்.

2. சந்தனம், சீந்தில், இஞ்சி, முத்தக்காசு, சிறு காஞ்சொறி வேர், இவை சேர்ந்த குடிநீரால் வாதசுரம் நீங்கும்.

3. சீந்தில், முத்தக்காசு, சுக்கு, சீரகம், சிறுகாஞ்சொறி, சந்தனம் ஆகியவற்றை பலம் ஒன்றாக எடுத்து, சிதைத்து, நீர்விட்டு, எட்டில் ஒன்றாக காய்ச்சிய குடிநீர் குடிக்க வாதசுரம் நீங்கும்.

4. சுக்கு, தழுதாழை, ஆமணக்கு வேர், செருப்படி, கூத்தன் குதம்பை, இவைகளை சிதைத்து, நீர்விட்டுக் காய்ச்சிக்குடிக்க வாத சுரம் நீங்கும்.

5. ஆற்று முள்ளி, பேராமுட்டி, அத்தி, இலந்தைவேர், கடுக்காய், சுக்கு முதலான, இவ் ஆறு சரக்குகளையும் இடித்து, குடிநீராக்கிக்-கொடுக்க வாத சுரம் நீங்கும்.

6. காட்டு ஆமணக்கு, தழுதாழை, திரிபலை, கையாந்த கரை, இவைகள் சேர்த்து செய்த குடிநீரால் வாத சுரம்நீங்கும்.

7. வெட்டிவேர், ஆலம்விழுது, தழுதாழை, சுக்கு, தான்றிக்காய், மஞ்சள் ஆகியவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய குடிநீரால் வாதசுரம் நீங்கும்.

## பித்த சுர கியாழம்

8. சதகுப்பை, கொத்தமல்லி, தண்ணீர்விட்டான், முத்தக்காசு, அதிமதுரம், சுக்கு, ஆடாதோடை, முஞுசுக்கை, வெட்டிவேர் ஆகியவற்றை சேர்த்துக் காய்ச்சிய குடிநீர் குடிக்க பித்த சுரம் நீங்கும்.

9. சீந்தில், கண்டங்கத்திரி, நன்னாரி, சிற்றாமுட்டி, திராட்சைக்கொடி, பற்பாடகம், முத்தக்காசு ஆகியவை சேர்ந்த குடிநீரால் பித்தசுரம் நீங்கும்.

10. கண்டங்கத்திரி, சிறுதேக்கு, சிறுகாஞ்சொரிவேர், வெட்டிவேர், சீந்தில், சுக்கு ஆகியவற்றைக் கொண்டு காய்ச்சிய குடிநீருடன் திப்பிலிப்பொடி சேர்த்துப் பருக பித்த சுரம் நீங்கும்.

11. திப்பிலி, வட்டத்திருப்பி, விலாமிச்சம், வெட்டிவேர், சீந்தில், பற்பாடகம், இஞ்சி, கண்டங்காரி, இவை சேர்ந்த குடிநீர் குடிக்க பித்த சுரம் நீங்கும்.

12. சிறுதேக்கு, சீந்தில், செந்தொட்டி, கோட்டம், சுக்கு, பற்பாடகம், திப்பிலி, ஆடாதோடை, முத்தக்காசு சேர்ந்த குடிநீர் குடிக்க பித்தசுரம் நீங்கும்.

13. வெட்பாலை தோல், வெட்பாலை அரிசி, இஞ்சி, பேய்ப்புடல், செந்தொட்டி, முத்தம், கோட்டம், நிலவேம்பு, சீந்தில், ஆடாதோடை, பற்பாடகம் ஆகியவை சேர்ந்த குடிநீரால் பித்தசுரம் நீங்கும்.

14. வெட்டிவேர், பேராமுட்டிவேர், சீரகம், சிற்றாமுட்டி வேர், சீந்தில், முத்தம் சிறுபயறு, ஆகியவற்றைக் கொண்டு குடிநீர் வைத்துக்- கொடுக்க பித்தசுரம்நீங்கும்.

15. கோஉசீட்டம், விலாம்பிச்சம், சந்தனம், . சீந்தில், சுக்கு, முத்தம் ஆகியவற்றை சேர்த்துக் குடிநீர் செய்து குடிக்க பித்தசுரம் நீங்கும்.

16. கொத்தமல்லி, பேராமுட்டி, பாற்சொற்றி, முத்தம், சுக்கு, நெல்லி வற்றல், விலாம்பிச்சம் சேர்ந்த குடிநீர் குடிக்க பிரத்த சுரம் நீங்கும்.

17. அரத்தை, அதிமதுரம், சதகுப்பை, நரிப்பயறுவேர், முத்தம், சீரகம், வெட்டிவேர் சேர்ந்த குடிநீர் குடிக்க பித்தசுரம் நீங்கும்.

18. பாசிப்பயறு, சீந்தில், சடாமாஞ்சி, முத்தம், பேராமுட்டி, அதிமதுரம், சீரகம் சேர்ந்த குடிநீர் குடிக்க பித்தசுரம் நீங்கும்.

## சிலேத்தும சுரத்துக்குக் கியாழம்

19. ஆடாதோடை யீர்க்கு, ஆற்றுமுள்ளி, கறிமுள்ளி, முட்கா வேளைவேர், செம்முள்ளி ஆகியவற்றை சேர்த்து செய்த குடிநீர் கொடுக்க சிலேத்தும சுரம் நீங்கும்.

20. ஆடாதோடையிலை ஈர்க்கு, கடுகுரோகிணி, கண்டங்காரி, வசம்பு, பிரண்டை, சுக்கு சேர்ந்த குடிநீரில் தேனும், திப்பிலித்தூளும் சேர்த்துக் குடிக்க சிலேத்தும சுரம் நீங்கும்.

21. சீந்தில், கண்டங்காரி, முள்ளி, செம்முள்ளி வேர், சேர்ந்த குடிநீரில், திப்பிலித்தூள் சேர்த்து குடிக்க சிலேத்தும சுரம் நீங்கும்.

22. சுக்கு, முள்ளி, கண்டங்கத்திரி, ஆடாதோடையீர்க்கு, கடுகுரோகணி, மரமஞ்சள், திரிபலை, பேய்ப்புடல், காட்டாமணக்கு வேர் சேர்த்து செய்த குடிநீரால் சிலேத்தும சுரம் நீங்கும்.

23. ஓமம், வசம்பு, சுக்கு, கண்டங்கத்திரி வேர், பெருங்குமிழ் வேர், நற்சங்கன், கையாந்தகரை சேர்ந்த குடிநீரால், சிலேத்தும சுரம் நீங்கும்.

## வாத பித்த சுரத்துக்கு

24. ஆமணக்கு வேர், சீந்தில், தமுதாமை, கூத்தன் குதம்பை, முத்தம், பாற்சொற்றி சேர்ந்த குடிநீரால் வாத பித்த சுரம்நீங்கும்.

## வாத சிலேத்தும சுரத்துக்கு

25. திரிபலை, கடுகுரோகிணி, வேப்பீர்க்கு, சுக்கு, சீந்தில், பேய்ப்புடல் இவைகளை சேர்ந்த குடிநீர் அருந்த வாத சிலேத்தும சுரம் நீங்கும்.

## பித்த சிலேத்தும சுரத்துக்கு

26. விலாமிச்சம், கொத்தமல்லி, இஞ்சி, கண்டங்கத்தரி, திரிபலை, பாற்சொற்றி, செந்தொட்டி, சேர்த்து காய்ச்சிய குடிநீரால் பித்த சிலேத்துமக சுரம்நீங்கும்.

<u>தொந்த சுரத்துக்கு</u>

27. கத்தன் குதம்பை, சுக்கு, கடுக்காய், சீந்தில், முத்தம், நிலவேம்பு, பாற்சொற்றி, பேராமுட்டி இவைகள் சேர்ந்த குடிநீர் குடிக்க தொந்தசுரம் நீங்கும்.

<u>சன்னி பாத சுரத்துக்கு</u>

28,29. ஆடாதோடை, சீந்தில், நிலவேம்பு, பற்பாடகம், தேசாவரம், இஞ்சி, காஞ்சொறி வேர், சிற்றாமுட்டி ஆகியவற்றை பொடியாக்கி ஒரு பலம் எடுத்து குடிநீராக்கிக் குடிக்க சன்னிபாத சுரம் நீங்கும்.

30. பெருங்குமிழ்வேர், சித்திரமூலம், அரத்தை, அழிஞ்சில்வேர், செவ்வியம், பேராமுட்டி இவைகள் சேர்ந்த குடிநீரால் சன்னி பாதம் நீங்கும்.

<u>தருண சுரம்</u>

31. சந்தனம், விலாமிச்சம், முத்தம், சுக்கு, கண்டங்காரி, செந்தொட்டி, வேப்பவிதை, சீந்தில், சுவரொட்டி, கடுகு, பாதிரி சேர்ந்த குடிநீரால் தருணசுரம் நீங்கும்.

<u>பூராண சுரத்துக்கு</u>

32. பேராமுட்டி, திராட்சைக் கொடி, பாற்சொற்றி, சீந்தில், சுக்கு, சீதேவி செங்கழுநீர் சேர்ந்த குடிநீர் பூராண சுரத்தை நீக்கும்.

## பூரண சுரத்துக்கு

33. சுக்கு, மரமஞ்சள், வசம்பு, ஏலம், சந்தனம், கண்டங்கத்திரி சமூலம், துளசி, பேராமுட்டி இவைகளால் ஆன குடிநீர்க்கு பூரண சுரம் நீங்கும்.

## அசீரண சுரத்துக்கு

34. திரிபலை, வெண்சங்கம் வேர், கொடிவேலி, திரிகடுகு, ஓமம், வசம்பு, திப்பிலி மூலம் சேர்ந்த குடிநீரால் அசீரண சுரம் நீங்கும்.

## தாப சுரத்துக்கு

35. சந்தனம், கோரைக்கிழங்கு, வெட்டிவேர், சுக்கு, விலாம்பிச்சம், பற்பாடகம் இவைகள் சேர்ந்தக் குடிநீரால் தாப சுரம் நீங்கும்.

36. திராட்சைக் கொடி, பேரீச்சு, கடுகுரோகிணி, நெய்தல், பற்பாடகம், சீந்தில், இவைகள் சேர்ந்த குடிநீரால், தாகம், புலம்பல், மூர்ச்சை, மெய்மயக்கம், வெப்பம் நீங்கும்.

37. ஆடா தோடை இலை, வில்வ வேர், கடுகு ரோகிணி, முள்ளி, நிலவேம்பு, பற்பாடகம், முதலியன சேர்த்துக் காய்ச்சிய குடிநீரில் கற்கண்டு போட்டுக் குடிக்க தாப சுரம் நீங்கும்.

## அஸ்தி சுரத்துக்கு

38. பேய்ப்புடல், பற்பாடகம், கடுகு ரோகிணி, முத்தம், ஏலம், சீந்தில், சிறுதும்மட்டிவேர், இவைகள் சேர்ந்த குடிநீரால் அஸ்தி சுரம் நீங்கும்.

ரத்த சுரத்துக்கு

39. வெள்ளறுகு, பேராமுட்டி, இஞ்சி, அசுவகெந்தி, கொடிவேலி, வசம்பு, நாயுருவி இலை முதலியன சேர்ந்த குடிநீரால் ரத்த சுரம் நீங்கும்.

தோலைப் பற்றிய சுரத்துக்கு

40. திரிபலை, கடுகுரோகிணி, சுக்கு, மனுபாலை, மருள்கிழங்கு, வேலம், சந்தனம், சிற்றாமுட்டி, பேராமுட்டி, நாக முட்டி முதலியவை சேர்ந்த குடிநீரால் ரத்தசுரம் நீங்கும்.

விஷ சுரத்துக்கு

41. வெள்ளுள்ளி, பேய்ப்புடல், வேப்பீர்க்கு, பற்பாடகம், கொடிவேலி, சுக்கு, பொன்முசுட்டை இவைகளால் ஆன குடிநீரால் தீராத விஷ சுரம் நீங்கும்.

42. செந்தொட்டி, பற்பாடகம், செவ்வியம், கொடிவேலி, தழுதாழை, நிலவேம்பு சுக்கு முதலியவை சேர்ந்த குடிநீரால் விஷ சுரம் நீங்கும்.

விஷம சீத சுரத்துக்கு

43. மனுபாலை, துளசி, பெருங்குறிஞ்சி, சிற்றாமுட்டி, பேராமுட்டி, வேலம், சந்தனம், வன்னி, வட்டத்திருப்பி, முதலியவை கொண்டு செய்த குடிநீர்க்கு விஷம சீத சுரம் நீங்கும்.

தோஷ சுரத்துக்கு

44. கண்டங்காரி, நெய்தல் கிழங்கு, சீந்தில் முதலியவை சேர்ந்த குடிநீர் உழக்கு உண்டவுடன் வாத சிலேத்துமத்தால் உண்டான தோட சுரம் நீங்கும்.

45. வில்வ வேர், நொச்சி இலை, வெள்சங்கம் வேர், சுக்கு, மிளகுவேர், கொடிவேலி, கூத்தன்குதம்பை முதலியவை சேர்ந்த குடிநீரால் தோட சுரம் நீங்கும்.

46. எருக்கம் வேர், சுக்கு, கண்டங்கத்திரி, வசம்பு, சங்கன், செருப்படி வேர், குமிழ் வேர், பேராமுட்டி முதலியவை சேர்த்துக்-காய்ச்சிய குடிநீரால் தோட சுரம் நீங்கும்.

திரிதோஷ சுரத்துக்கு

47,48. முத்தம், திரிபலை, முளிளி, கண்டங்கத்திரி, வேப்பம் வித்து, கொத்தமல்லி, சீந்தில்கொடி, சுக்கு, புடல், பற்பாடகம், வாய் விளங்கம், நெய்தல், நிலவேம்பு, திப்பிலி மூலம், கடுகுரோகணி, முதலியவை சேர்ந்தகுடிநீரில் தேன் சேர்த்துக் குடிக்க திரிதோடம் நீங்கும்.

மாறல் சுரத்துக்கு

49. அசீரணம், மாறல் சுரம், சன்னி பாதம் ஆகியவை நீங்கும்.

ஒரு மாறல் சுரத்துக்கு

50. பேராமுட்டி, இஞ்சி, மருபாலைவேர், நிலவேம்பு, திரிபலை, கற்ப்பாலைவேர் முதலியவை சேர்த்து வைத்து குடிநீர்க்கு ஒரு மாறல் சுரம் நீங்கும்.

## இரு மாறல் சுரத்துக்கு

51. சீந்தில், முத்தக்காசு, சுக்கு, பேய்ப்புடல், சிறுதும்மட்டி வேர், பற்பாடகம் முதலியவை சேர்ந்த குடிநீரால் இருமாறல் சுரம் நீங்கும்.

## மூன்று மாறலுக்கு

52. திராட்சைக் கொடி, பேராமுட்டி, சகாதேவி, சுக்கு, சிறுதும்மட்டி, பறங்கி பட்டை, துளசி ஆகியவை சேர்ந்த குடிநீரால் மூன்று மாறல் சுரம் நீங்கும்.

## நாலு மாறல் சுரத்துக்கு

53. பேராமுட்டி, வேலம், சந்தனம், பேய்ப்புடல், செவ்வியம், துளசி, சுக்கு, கையாந்தகரைவேர், மருபாலைவேர் முதலியவை சேர்த்து செய்த குடிநீரால் நாலு மாறல் சுரம் நீங்கும்.

54,55. வேப்பீர்க்கு, சிற்றாமுட்டி, பேராமுட்டி, நாகமுட்டி, நிலவேம்பு, சுக்கு, நிலப்பனைக்கிழங்கு, கொடிவேலி இவைகளைக்-கொண்டு செய்த குடிநீர் குடிக்க ஒரு மாறல், இருமாறல், மூன்று மாறல், நாலா மாறல் சுரம் நீங்கும்.

## சீத சுரத்துக்கு

56. காட்டுத்துளசி, சுக்கு, வேலம், சந்தனம், கையாந்தகரை, பேராமுட்டி, அவுரிவேர், இவைகளை சமபாகம் கொண்டு செய்த குடிநீர் குடிக்க, சீதசுரம், நாட்பட்ட சுரம் நீங்கும்.

57. சுக்கு, வேப்பீர்க்கு, சுட்ட வசம்பு, வேலம், சந்தனம், பேராமுட்டிவேர், அரச மரப்பட்டை, இவைகளை சமபாகம் கொண்டு செய்த குடிநீரால் சீதசுரம் நீங்கும்.

58. சுக்கு, நிலவேம்பு, சீதேவி செங்கழுநீர், பாலைவேர்கள், கையாந்தகரைவேர் முதலியவை சேர்ந்த குடிநீரில் தேன் விட்டு அருந்த சீதசுரம் நீங்கும்.

59. சிற்றாமுட்டி, பேராமுட்டி, வேலம், சந்தனம், முத்தம், இலந்தை இலை, சகாதேவி, சுக்கு பற்பாடகம், கூழ்பாலை, முதலியவை சேர்ந்த குடிநீரால் சீத சுரம் நீங்கும்.

சாயங்காலம் வருகிற சுரத்துக்கு (மாலைச் சுரத்தக்கு)

60. நெல்லிமுள்ளி, பேய்ப்புடல், கடுகுரோகிணி, சுக்கு, நிலவேம்பு, மருள்கிழங்கு, சிறுதம்முட்டிவேர், முதலியவை சேர்ந்த குடிநீர்குடிக்க மாலையில் வரும் சுரம் நீங்கும்.

இராத்தி வரும் சுரத்துக்கு (இரா சுரம்)

61. விஷ்ணு கிராந்தி, சுக்கு, வேலம், சந்தனம், மனுபாலை, சிற்றமுட்டி, பேராமுட்டி, நாகமுட்டி, கடுகுரோகிணி முதலியவை சேர்ந்த குடிநீர் கொள்ள இரவில் வரும் சுரம் நீங்கும்.

62. சுக்கு, குடசப்பாலை, சீதேவி செங்கழுநீர், சிறுதும்முட்டிவேர், மிளகு, பேராமுட்டி, மருபாலை முதலியவை சேர்ந்த குடிநீரால் இரவில் வரும் சுரம் நீங்கும்.

சர்வ சுரத்துக்கும்

63. சிற்றா முட்டி, பேரா முட்டி, நாக முட்டி, கடுகுரோகிணி, திரிபலை, சுக்கு, கூந்தன் குதம்பை இவைகள் இரண்டு பங்கு, முத்தம், பாற்சொற்றி ஒரு பங்கு சேர்த்து வைத்த குடிநீர் குடிக்க சர்வ சுரம் நீங்கும்.

64. செவ்வியம், கொடிவேலி, சீந்தில், நிலவேம்பு, விஷ்ணு கிராந்தி, இஞ்சி, முட்கா வேளை, முதலியவை சேர்ந்த குடிநீரால் சகல சுரமும் போகும்.

65. பேராமுட்டி, சீந்தில், கண்டங்கத்திரி, கூந்தன் குதம்பை, நிலவேம்பு, வேப்பீர்க்கு முதலியவை சேர்ந்த குடிநீரால் சர்வ வெப்ப சுரம் நீங்கும்.

66. சீந்தில், சங்கம் வேர், சுக்கு, ஆமணக்கு வேர், பற்பாடகம், கற்றாழை, முத்தம், கொடிவேலி, ஆகியவற்றால் செய்த குடிநீரால் எல்லாச் சுரமும் நீங்கும்.

67. கொன்றைவிதை, கொத்தமல்லி, பேய்ப்புடல், சிறுகாஞ்சொறிவேர், முத்தம், சுக்கு, ஆடாதோடையீர்க்கு ஆகியவை சேர்ந்த குடிநீர் குடிக்க எல்லா சுரமும் நீங்கும்.

## சந்திகசன்னிக்கு

68. சிறுகாஞ்சொறி, நொச்சி, மிளகு, வள்ளி, பாதிரி, பேய்ப்புடல், சுக்கு முதலியவை சேர்த்துச் செய்த குடிநீர் அருந்த சந்திக சன்னி நீங்கும்.

## அந்தக சன்னி

69. திப்பிலிமூலம், நெரிஞ்சிவேர், செவ்வியம், சித்திரமூலம், பேய்ப்புடல், கடுகு, திரிகடுகு முதலியவை சேர்த்துச் செய்த குடிநீர் குடிக்க அந்தக சன்னி நீங்கும்.

## ருத்தாங்க சன்னி

70. வெண்சங்கம் வேர், கொடிவேலி, கருங்காக்கட்டான், மிளகு, சுக்கு ஆகியவற்றைக் கொண்டு செய்த குடிநீர் கொடுக்க ருத்தாங்க சன்னி தீரும்.

## சித்த விப்பிரம் சன்னி

71. நீர்முள்ளிப்பழவிதை, நொச்சிஇலை, கடுகு, வெள்ளைப்பூண்டு, திரிபலை முதலியவை சேர்ந்த குடிநீர் குடிக்க சித்த விப்பிரம் சன்னி நீங்கும்.

## சீதாங்க சன்னி

72. பற்பாடகம், பேய்ப்புடல், கண்டுபாரங்கி, மிளகு, திப்பிலி மூலம், செவ்வியம், வள்ளி, திரிகடுகு முதலியவை சேர்ந்த குடிநீரால் சீதாங்க சன்னி போகும்.

## தாந்திரிக சன்னி

73. வெட்டிவேர், சுக்கு, திப்பிலி, திப்பிலிமூலம், செவ்வியம், சித்திர மூலம், மிளகு முதலியவை சேர்த்து வைத்த குடிநீரில் ஒட்டடைத்தூ ள், மாடையிடை சேர்த்துத் தர தாந்திரிக சன்னி நீங்கும்.

### கண்ட குச்ச சன்னி (குண்டகுப்ச சன்னி)

74. பாதிரிவேர், வில்வவேர், பற்பாடகம், பேய்ப்புடல், பெருங்குமிழ்-வேர், சுக்கு, கண்டங்கத்திரி, செவ்வியம் முதலியவை சேர்ந்த குடிநீர்க்கு கண்டகுப்ச சன்னி நீங்கும்.

### கர்ணிகச் சன்னி

75. திப்பிலி வேர், எருக்கம் வேர், கண்டங்கத்திரி, மருபாலை, திரிகடுகு, சிற்றாமுட்டி, பேராமுட்டி, நாகமுட்டி சேர்ந்த குடிநீர் குடிக்கக் கர்ணிகச் சன்னி நீங்கும்.

### புக்ன நேத்திர சன்னி

76. நொச்சி இலை, முத்தம், எருக்கம் வேர், சுக்கு, பச்சை, நெருஞ்சி வேர், பற்பாடகம், திப்பிலி மூலம் முதலியவை சேர்ந்த குடிநீர் குடிக்க புக்னநேத்திர சன்னி நீங்கும்.

### இரத்தட்டி சன்னி (இரக்தீட்டிவி சன்னி)

77. எருக்கம்வேர், சுக்கு, பாதிரிவேர், திரிபலை, பேய்ப்புடல் முதலியவை சேர்ந்த குடிநீர் அருந்த இரக்தீட்டிவி சன்னி நீங்கும்.

### பிரலாப சன்னி

78. திப்பிலி மூலம், சீந்தில், சுக்கு, பேய்ப்புடல், வன்னி, குமரிவேர், அழிஞ்சில், மரமஞ்சள் முதலியவை சேர்ந்த குடிநீரால் பிரலாபசன்னி நீங்கும்.

### சிருவா சன்னி

79. வெள்ளை, கருங்காக்கட்டான், சிற்றாமுட்டி, பேராமுட்டி, நாகமுட்டி, செவ்வியம், திப்பிலிவேர், வன்னி, காரை, முதலியவை சேர்ந்த குடிநீரில் திப்பிலித்தூள் வேர் தூவி குடிக்க சிருவாச் சன்னி நீங்கும்.

அபிநியாச சன்னி

80. சிற்றாமுட்டி, பேராமுட்டி, நாகமுட்டி, வெள்ளை, கருங்-காக்கட்டான், நீர்முள்ளி, செம்முள்ளி, வன்னி, திப்பிலி வேர், திரிபலை, சுக்கு, வசம்பு, செவ்வியம், சேர்ந்த குடிநீரால் அபிநியாச சன்னி நீங்கும்.

சர்வ சன்னிக்கும்

81. ஓமம், நிலவேம்பு, பேய்ப்புடல், திப்பிலி, தழுதாழை வேர், பற்பாடகம் முதலியவை சேர்ந்த குடிநீர் குடிக்க சர்வ சன்னி நீங்கும்.

திசூல கியாழம் (தசமூல கியாழம்)

82. முட்டி, தழுதாழை, நீர்முள்ளி, கண்டங்கத்திரி, பாதிரிவேர், காட்டாமணக்குவேர், வில்வம், சுத்தன்குதம்பை, சிறுகுமிழ், பெருகுமிழ், முதலியவை சேர்ந்த குடிநீரால் சன்னி நீங்கும்.

பஞ்சமூல கியாழம்

83. வில்வவேர், தழுதாழைவேர், பாதிரிவேர், குமிழ்வேர், காட்டாமணக்குவேர் முதலிய பஞ்ச மூலமான இதனுடன் சுக்கும் சேர்த்த குடிநீரிட்டருந்த சன்னி நீங்கும்.

அஷ்ட மூல கியாழம்

84. நீர்முள்ளி, கண்டங்கத்திரிவேர், சிற்றாமுட்டி, பேராமுட்டி, நாகமுட்டி, வில்வவேர், சுத்தன்குதம்பை, இவ் அஷ்ட மூலத்தைக் குடிநீர் வைத்தருந்த, சன்னி நீங்கும்.

அஷ்டாதசமூலம்

85, 86. வெள்ளை காக்கணம், கருங்காக்கணம், தழுதாழை, சிற்றாமுட்டி, பேராமுட்டி, நாகமுட்டி, கண்டங்கத்திரி, நீர்முள்ளி, நொச்சி முருங்கை, குமிழ், சுத்தன் குதம்பை, வில்வம், மருபாலை, மிளகு, பாதிரி முதலிய பதினெட்டு மூலிகைகள் சேர்ந்த குடிநீர் குடிக்க சன்னி நீங்கும்.

## பஞ்ச கோல கியாழம்

87. திப்பிலி மூலம், செவ்வியம், சித்திரமூலம், திப்பிலி, சுக்கு முதலிய பஞ்சகோலத்தை குடிநீரிட்டு குடிக்க சன்னி சுரம் நீங்கும்.

## வாந்தி விக்கலுக்கு

88. அதிமதுரம், கொத்தமல்லி, வில்வம், ஏலம், விலாமிச்சம், மணபாலை, ஏழும் சேர்ந்த குடிநீர் குடிக்க வாந்தி, விக்கல் தீரும்.

89. இலவங்கத் தோல், அரத்தை, ஏலம், மனபாலை, விலாமிச்சம், மதுரம்,வில்வம், இவைகளை சம அளவாகக் கொண்டு செய்த குடிநீரால், வாந்தி, விக்கல் போகும்.

## தாகம் வாந்தி விக்கலுக்கு

90. மருக்கொழுந்து, சீரகம், கோட்டம், மனபாலை வேர், அதிமதுரம், வெட்டிவேர், கொத்தமல்லி முதலியவை சேர்ந்த குடிநீர் குடிக்க, தாகம், வாந்தி, விக்கல் போகும்.

## அந்தர தாகத்துக்கு

91. கோட்டம், அதிமதுரம், விலாமிச்சம், வெட்டிவேர், கொத்தமல்லி, சீரகம், சோம்பு, சதாபிவிரை, முதலியவை சேர்ந்த குடிநீர்க்கு அந்தர தாகம் நீங்கும்.

92. பாதிரிப்பூ, அதிமதுரம், தாமரைவளையம், நெல்லிப்பருப்பு, சீரகம், கோட்டம், விலாமிச்சம், முதலியவை சேர்ந்த குடிநீர்க்கு அந்தர தாகம் நீங்கும்.

93. ஆல், இச்சி, நாவல், அரசு, ஆத்தி இவைகளின் தோலுடன், சீரகம், அதிமதுரம், சேர்த்து செய்த குடிநீரால் அந்தர தாகம் போகும்.

## சூலைக்கு

94. வெண்சங்கிலை, மிளகு, மான்கொம்பு, காயம், வெள்ளுள்ளி, சுக்கு முதலியவைகளை சம அளவாகக் கொண்டு செய்த குடிநீரால் சூலை போகும்.

95. கருணைக் கிழங்கு, வசம்பு, சுக்கு, வெள்ளைப் பூண்டு, முருங்கைத் தோல், திப்பிலி மூலம், வல்லி, வட்டத்திருப்பி, இவை எட்டும் சேர்த்து வைத்த குடிநீர் குடிக்க சூலை போகும்.

96. பேராமுட்டி, சிற்றாமுட்டி, நன்னாரி, மாவல்லிக் கிழங்கு, சமுத்திராப்பழம், அதிமதுரம், சுக்கு, மஞ்சிட்டி, வெட்டிவேர், திப்பிலி, முத்தம், செம்புளிச்சை, விலாம்பிச்சம், தேன் சேர்த்து செய்த குடிநீரால், சூலை, வெப்பு நீங்கும்.

## அரையில் சுரத்துக்கு

97. சிற்றாமுட்டி, பேராமுட்டி, சீந்தில், சுக்கு, திப்பிலி, நிலவேம்பு, இவற்றால் வைத்த குடிநீர் குடிக்க அரையில் வரும் சுரம் நீங்கும்.

## மூர்ச்சைக்கு

98. நெருஞ்சி, அசுவகெந்தி, நரிப்பயற்றம் வேர், சுக்கு, சதாவேரிக்கிழங்கு, சீரகம் முதலியவை சேர்ந்து காய்ச்சிய குடிநீர் குடிக்க மூர்ச்சை நீங்கும்.

மந்தக் கிராணி, ஆமவலிக்கு

99. சுக்கு, முத்தக்காசு, அதிவிடயம், சீந்தில் முதலியவை சேர்த்து செய்த குடிநீரால் மந்தக்கிராணி, ஆமவலி முதலியவை நீங்கும்.

100. சீந்தில், அதவிடையம், முத்தம், இஞ்சி இவை சேர்த்துக்-காய்ச்சிய குடிநீர் குடிக்க, ருசியின்மை, மந்தக் கிறாணி, ஐந்து நாளில் நீங்கும்.

அசீரண, மந்த சுவாச காசத்துக்கு

101. கண்டங்கத்திரி, சீந்தில், சுக்கு இவை சேர்ந்த குடிநீரில் கனத்தை அரைத்து, கலந்து குடிக்க அசீரண, மந்த சுவாச காசம் தீரும்.

அசீரண வலிக்கு

102. வறுத்த கழற்ச்சிப் பருப்பு, மாவிலிங்கம், முள்ளி, சுக்கு இவைகளை வெந்நீரில் அரைத்துக் கொள்ள அசீரணத்துடன் கூடிய வயிற்று வலி நீங்கும்.

தீபனத்துக்கு

103. ஓமம், கொடிவேலி, சுக்கு, இந்துப்பு, நொச்சிக்-கொழுந்து இவைகளை அரைத்து மோரில் கலந்து காய்ச்சி குடிக்க மந்தம் நீங்கும்.

பூச்சிக்கு

104. முத்தம், எலிச்செவி, முள்முருங்கை, திரிபலை ஆகியவை சேர்ந்த குடிநீரில், வாய்விளங்கத்தூள் சேர்த்து குடிக்க வயிற்றிலுள்ள பூச்சி நீங்கும்.

வாத வாய்வுக்கு

105. ஆடாதோடை வேர், சீந்தில் வேர், சேர்த்து வைத்த குடிநீரோடு, விளக்கெண்ணெய் சேர்த்து குடிக்க உடலெல்லாம் வலிக்கும் வாத வாயு நீங்கும்.

சருவாங்க வாதத்துக்கும்

106,107. முள்ளி, கண்டங்கத்திரி, கொமட்டி மாதளை, வில்வம், சிற்றாமணக்கு வேர்களுடன், திரிகடுகு சேர்த்து வைத்த குடிநீரில் எவட்சாரம், இந்துப்பு முதலியவை தூவி, ஏழு நாள் குடிக்க சருவாங்க வாதம் போகும்.

பாண்டு வீக்கத்துக்கு

108. சீந்தில், சாரணைவேர், மரமஞ்சள் முதலியவை சேர்த்து வைத்த குடிநீரில் குங்குலியத்தூள் போட்டுக் குடிக்க பாண்டு, வீக்கம் போகும்.

109. சாரணைவேர், வெள்ளறுகு, கொன்றைவேர், சுக்கு, கரிசாலை, பிரமி, வன்னி இவை சேர்ந்த குடிநீர் குடிக்க வீக்கம் போகும்.

110. வெண்சாரணை, சுக்கு, சதுரக் கள்ளி வேர், வெண்சங்கிலை, கடுக்காய், வன்னி இவற்றுடன் பசுமூத்திரம் சேர்த்து வைத்த குடிநீர் குடிக்க பாண்டு வீக்கம் தீரும்.

111. பிரமி, திரிபலை, கிட்டத்தூள், வன்னி, சுக்கு, சாரணைவேர், சமன் எடை எடுத்து, பசுவின் மூத்திரம் சேர்த்து வைத்த குடிநீரால் பாண்டு, சோபை போகும்.

112. செம்முள்ளி, நீர்முள்ளி, சாரணைவேர், பிரமி, சுக்கு, கடுக்காய், அரசம்பட்டை இவைகளை வெள்ளாட்டு மூத்திரத்தில் சேர்த்து குடிநீரிட்டு அருந்த பாண்டு, சோகை நீங்கும்.

## சுரம், பாண்டு, சோபைக்கு

113. அரசம்பட்டை, பழைய கிட்டத்தூள், சுக்கு, சாரணை, ஓமம், வில்வம், பெருங்குமிழ், ஆனைநெருஞ்சில், முன்னை, சிறுமல்லிகை, சிறுவழுதுளை, கத்திரி, பாதிரி, பெருவாகை, தழுதாழை இவைகளுடன் வெள்ளாட்டு மூத்திரம் சேர்த்து செய்த குடிநீர் அருந்த சோபை, சுரம், பாண்டு நீங்கும்.

## அதிசாரத்துக்கு

114. பெருமரப்பட்டை, சுக்கு, முத்தம், வில்வம், மாதளை, அதிவிடையம் இவைகள் சேர்ந்து செய்த குடிநீரால் அதிசாரம் போகும்.

115. பொன்முசுட்டை, கொத்தமல்லி, சுக்கு, பற்பாடகம், விலாம்பிச்சம், வெட்டிவேர், சீந்தில், நிலவேம்பு, செந்தொட்டி இவைகளைச் சேர்த்துப் போட்ட குடிநீர் குடிக்க அதிசாரம் நீங்கும்.

116. அதிவிடையம், முத்தம், ஓமம், சுக்கு, குடசப்பாலை தோல், பெருமரப்பட்டைத்தோல் சேர்ந்த குடிநீர் கொள்ள அதிசாரம் நீங்கும்.

117. அதிவிடையம், சுக்கு, சீந்தில், முத்தம், குடசப்பாலை, நிலவேம்பு, இவைகள் சேர்ந்த குடிநீர் குடிக்க அதிசாரம் போகும்.

118. மாதளைவேர், அதிவிடையம், ஓமம், குடசப்பாலை, முத்தம், சுக்கு சேர்ந்த குடிநீர் குடிக்க இரத்தக் கழிச்சல் நீங்கும்.

119. மஞ்சள், அதிமதுரம், குடசப்பாலைத்தோல், மரமஞ்சள், ஆடாதோடையிர்க்கு சேர்த்து செய்த குடிநீர் கொள்ள அதிசாரம் போகும்.

120. வில்வப்பழம், வெட்டிவேர், அத்திமலர், யானைத்திப்பிலி, பூங்குத்தோல், நெல்பொறி இவைகள் சேர்த்து செய்த குடிநீரில் தேன் கூட்டிக் கொடுக்க குழந்தைகள், பெரியோர்களுக்கான அதிசாரம் நீங்கும்.

121. நன்னாரி, பொன்முசுட்டை, சுக்கு, முத்தம், சீந்தில் இவைகளை சேர்த்து வைத்த குடிநீர் கொள்ள அதிசாரம் போகும்.

பால அதிசாரத்துக்கு

122. காட்டாத்திப்பூ, கருங்காலி வேர்ப்பட்டை, யானைத்திப்பிலி, வில்வவேர் முதலியவை சேர்த்து வைத்த குடிநீரில் தேன் விட்டுக் கொடுக்க பால அதிசாரம் போகும்.

அதிசார வீக்கத்துக்கு

123. சுக்கு, கொடிவேலி, முத்தம், செம்புளிச்சை, சிறுதேக்கு, சாரணைவேர், திப்பிலி மூலம் சேர்ந்த குடிநீர்க்கு வயிற்று நோய், வீக்கம், அதிகாரம் போகும்.

124. சுக்கு, குடசப்பாலை தோல், சீந்தில், நிலவேம்பு, அதிவிடையம், முத்தம் இவைகளை சமமாகக் கொண்டு செய்த குடிநீரால் அதிசாரம் போகும்.

125. மாம்பட்டை, சுக்கு, முத்தம், மாதளை பிஞ்சு, வில்வபழவற்றல், நிலவேம்பு, பெருமரத்தோல் முதலியவை சேர்ந்த குடிநீரால் அதிசாரம் போகும்.

126. வில்வப்பழ வற்றல், மாதளை பிஞ்சு, குடசப்பாலைத்தோல், சுக்கு, மாங்கொட்டைப் பருப்பு, பெருமரத்தோல் முதலியவை சேர்ந்த செய்த குடிநீர்க்கு அதிசாரம் போகும்.

127. காட்டாத்திப் பூ, முத்தம், மாதளைபிஞ்சு, பெருமரப்பட்டைத்-தோல், வில்வப்பழவற்றல், குடசப்பாலைத்தோல், சேர்ந்த குடிநீர் குடிக்க அதிசாரம் நீங்கும்.

128. சுக்கு, மாதளைப் பிஞ்சு, சாதிக்காய்,குடசத்தோல், முள்ளிலவப்பிசின் முதலியவை சேர்ந்த குடிநீர் குடிக்க அதிசாரம் நீங்கும்.

129. அதிவிடையம், குடசத்தோல், சீந்தில், சுக்கு, காட்டாத்திப் பூ, கடப்பந்தோல், சாதிப்பத்திரி முதலியன சேர்ந்த குடிநீர்க்கு அதிசாரம் போகும்.

<u>தோஷாதி சாரத்துக்கு</u>

130. சீந்தில், கழற்சிப்பருப்பு, சீரகம், இஞ்சி, முத்தம், நிலவேம்பு, அதிவிடையம், வில்வக் கனி வற்றல்,குடசப்பாலை முதலியவை சேர்ந்த செய்த குடிநீர்க்கு தோடாதி சாரம் போகும்.

131. கஞ்சா விதை, வில்வவேர், அதிவிடையம், சுக்கு, ஏலம், நிலவேம்பு, சீந்தில், வில்வபழ வற்றல், லவங்கப் பத்திரி, இவற்றால் ஆன குடிநீர்க்கு அதிசாரம் போகும்.

132. சுந்தன் குதம்பை, குடசப்பாலைத் தோல், சீந்தில், முத்தம், நிலவேம்பு, சுக்கு, அதிவிடையம், வில்வப் பிஞ்சு, கஞ்சா விதை, முதலியவை சேர்ந்த குடிநீரால் தோடாதி சாரம் போகும்.

133. பெருமரப்பட்டைத்தோல், சுக்கு, முத்தம், குடசப்பாலை, மாதளம்பூ, அதிவிடையம், காட்டாத்திப் பூ, முதலியவை சேர்ந்த குடிநீர் கொள்ள அதிசாரம் நீங்கும்.

134. மாதளைப் பிஞ்சு, சுக்கு, அதிவிடையம், சீந்தில், முத்தம், வில்வப்பழவற்றல், சடாமாஞ்சி, பெருமரத்தோல் சேர்ந்த குடிநீர் குடிக்க அதிசாரம் நீங்கும்.

135,136. முருங்கைத் தோல், வெள்ளைப்பூண்டு, சுக்கு, ஓமம், கருஞ்சீரகம், சம அளவாகக் கொண்டு காய்ச்சி நான்கில் ஒரு பாகமாகச் செய்து, இறுத்து இதில் இந்துப்பு, குடசப்பாலை, சுக்கு, அதிவிடையம் இவைகளை சமமாகப் போட்டு மறுபடியும் காய்ச்சிய குடிநீர் அருந்த அதிசாரமும், அதிசாரத்தால் எழுந்த சூலையும் போகும்.

<u>இரத்த பித்தத்துக்கு</u>

137. முத்தம், விலாமிச்சை, மூங்கில் இலை, வெட்டிவேர், மாதளைப் பிஞ்சு, சுக்கு, நன்னாரி இவை சேர்ந்த குடிநீர்குடிக்க இரத்த பித்தம் நீங்கும்.

<u>மூத்திர கிரிச்சரத்துக்கு</u>

138. கொன்றை பழம், கடுக்காய், நொச்சிவேர், சிறுபீளை, ஆடாதோடையிலை முதலியவை சேர்ந்த குடிநீரில் தேன்விட்டுக் குடிக்க மூத்திர கிரிச்சம் போகும்.

## சிலேட்டும பிரமேகத்துக்கு

139. திரிபலை, பேய்த்தும்மட்டி, செம்புளிச்சை, முத்தக்காசு, சேர்ந்த குடிநீரில் மஞ்சிட்டி பொடி தூவி, தேன்விட்டு குடிக்க, சிலேட்டும பிரமேகம் நீங்கும்.

## இருபது மேகத்துக்கும்

140. ஏலம், லவங்கம், பாதிரி, முத்தம், விலாம்பிச்சம் வேர், சந்தனம், முந்திரி, வெட்டிவேர் முதலியன கூட்டி, குடிநீர் வைத்து குடிக்க இருபது மேகங்களும் போகும்.

## சகல ரோகத்துக்கும்

141. கோட்டம், அரத்தை, கொடிவேலி, செவ்வியம், திப்பிலி-மூலம், நெருஞ்சில், சுக்கு, அசுவகெந்தி, நரிப்பயற்றின் வேர் முதலியன சேர்ந்த குடிநீர்க்கு சகல நோய்களும் நீங்கும்.

142. ஆற்றுமுள்ளி, செம்முள்ளி, நெருஞ்சில் வேர், சுக்கு, மனுபாலை, திரிபலை, சதகுப்பை முதல்வியவை சேர்ந்து செய்த குடிநீர்க்கு, சகல நோயும் போகும்.

## திருதம்
(வேறு)

### சுத்திநெய்

கிளிஞ்சிலில் உள்ளிருக்கும் சதை ஒரு குறுணி, வெள்ளைப்பூண்டு, நான்கு படியுடன் 2 மரக்கால் நீர்விட்டு, நாலில் ஒரு பங்காக காய்ச்சி இறுத்து, இதனுடன் பசு நெய்குறுணி, பசுவின்பால் பதக்கு, சதாரக்கள்ளிப் பால் இரண்டு படி, பூனையறணைக் கிழங்கு நீர் குறுணி சேர்த்து, மேலும், இந்துப்பு, திரிகடுகு, திப்பிலி, திப்பிலிமூலம், செவ்வியம், சீரகம், வகைக்குப் பலமாகவும், சித்திரமூலம், சிறுநாகப்பூ, ஏலம், கோட்டம், லவங்கப்பத்திரி, யானைத்திப்பிலி, அதிமதுரம், பெருங்காயம், பூனையறணைக்கிழங்கு, திரிபலை, எவட்சாரம் இவை வகைக்கு இரண்டு பலமாக எடுத்துப் பொடி செய்து, மேற்படி நெய்யிலிட்டு எரித்துச் சரியான பதத்தில் வடித்து எடுக்க, சுத்தி நெய் கிடைக்கும்.

தீரும் நோய்: சுத்தி நெய்யை உண்டிட, மாமூத்திரக் கிரிச்சம், பித்தப்பாண்டு, விட பாகம், கை, கால் வீக்கம், சயம், பித்தசுரம், பெருவயறு முதலியன நீங்கும்.

### வறளாதி குக்குலு நெய்

முன்னை, கொடிவேலி, மூக்குறட்டை, சிற்றாமுட்டி, காட்டு முருங்கை, மாவிலிங்கம், நன்னாரி, சித்தமல்லி, புங்கு, சிறுகுறிஞ்சி, நொச்சி, கண்டங்கத்திரி, இம்பூறல் வேர், சாரணை, விழுதி, தழுதாழை, சீந்தில் தண்டு, சடைச்சி, முருங்கை, வேலந்தோல் பேய்ப்புடல், வேப்பந்தோல், பேரமல்லி, வண்ணக்குறிஞ்சி, வெள்ளருகு

பாதிரிவேர், ஈசுவரமூலி, சிறுகுறட்டைக்கிழங்கு, செம்முள்ளி சமூலம், ஏலம், கொடிவேலி, ஆடாதோடை, இவைகள் வகைக்கு மூன்றுபலம் எடுத்து, நீர் நாழியுடன் சேர்த்து, மேலும் பசுவின்நெய், நாலு நாழி சேர்த்து, இதில் கற்கமாக அதிவிடையம், கிராம்பு, சிறுதேக்கு, கடுக்காய், அரத்தை, சீரகம், கார்போகிஅரிசி, சித்திரமூலம், செவ்வியம், சதகுப்பை, சாதிக்காய், தான்றிக்காய், கச்சோலம், கல்லுப்பு, கோட்டம், இந்துப்பு, தேவதாரு, எவட்சாரம், வெட்பாலை அரிசி, கொத்தமல்லி சீரகம், மஞ்சட்டி சீனக்காரம், கடுகுரோகிணி, விளா அரிசி, திரிகடுகு, யானைத்திப்பிலி, பெருங்குரும்பை, இவைகளை வகைக்கு மூன்று கழஞ்சு, குக்குலு மூன்றுபலம் சேர்த்து ஆவின் பால் குறுணியில் சிறிது விட்டு அரைத்து, மேற் சொன்ன நெய்யுடன் சேர்த்து, எரித்து, பதத்தில் வடிக்க வறளாதி குக்குலு நெய் கிடைக்கும்.

<u>தீரும் நோய்கள்</u>: இந்நெய்யை அருந்தி வர, மிகுந்த கபம், மண்டைக்கிராந்தி, கண்டமாலை, பவுத்திரங்கள், தொண்டையில் ஏற்படும் கட்டி, விஷக்கடி, மூலநோய், செவிக்கள்ளன், அழிகிரந்தி, கன்னக்கிரந்தி, மற்ற புண்களும் தீரும்.

## <u>கடுக்காய் நெய்</u>

கடுக்காய் நாறு, கடுகு ரோகிணி, திரிகடுகு, இந்துப்பு, சுத்தி செய்த மண்டூரத்தூள், காந்தபற்பம், இவை வகைக்கு அரைபலம், சீரகம், சோம்பு, இரண்டு பலம், கோட்டம், சாதிக்காய், ஏலம், திரிபலை, சதகுப்பை வகைக்கு ஒரு பலம், சுத்தி செய்து நோவாளம்

15 பலம், அரப்பொடி 9 பலம் இவைகளுடன் காக்கம் கையாந்தகரை, படிகாரம், பிரமி, கீழ்க்காய்நெல்லி, வசிமல்லி, ஊ தவளை, ஏலம், பொடுதலை, கற்றாழை, தைவேளை, இவைகளை எல்லாம் இடித்துப்-பிழிந்த சாறு வகைக்கு நாழி, நெய் நாழிவிட்டு காய்ச்சி வடித்தெடுக்க, கடுக்காய் நெய் கிடைக்கும்.

<u>தீரும் நோய்கள்</u>: இந்நெய்யை உண்ண, காமாலை, விடபாகம், பித்த பாண்டு, ஈளை, காசம், சோபை, குறிவ்க்கம் முதலிய துன்பங்களைத் தரும் நோய்கள் தீரும்.

## பூசணிக்காய் நெய்

பூசணிக்காய் சாறு, முசுமுசுக்கை, தாமரைவளையம், சதாவேரி, கரும்பு, ஒரிலைத்தாமரை, இவைகளின் சாறு, நெய், பால் வகைக்கு குறுணி சேர்த்து, இதில் கற்கமாக, சிறுதேக்கு, சுக்கு, இலுப்பைப்பூ, அரத்தை, சந்தனம், நன்னாரி, செண்பகப்பூ, சீரகம், கடுக்காய் லவங்கம், சிறு நாகப்பூ, ஏலம், கொத்தமல்லி, வெட்டிவேர், சாதிக்காய், விலாம்பசுச்சம், அதிமதுரவேர், தாமரைப்பூ தாது, கொட்டிக் கிழங்கு, சாத்திரவேதி, வெட்பாலை அரிசி, சீந்தில் கிழங்கு, முந்திரி, கோட்டம், பேர்ச்சு, குங்குமப்பூ, கடுகுரோகிணி, சீரகம், நவட்சாரம், மஞ்சிட்டி, இவைகளை வகைக்கு மூன்று கழஞ்சு வீதம் எடுத்து, முறையாக அரைத்து மேற்படி நெய்யுடன் சேர்த்து காய்ச்சி இறுத்த எடுக்கும் நெய் பூசணிக்காய் நெய் ஆகும்.

தீரும் நோய்கள்: இந்நெய்யை சர்க்கரையுடன் சேர்த்து உண்ண பித்தம், தாகநட்டம், உடல் இளைப்பு, ரத்தமேகம் நீங்கும்.

## இலந்தை நெய்

இலந்தையிலையைப் பிழிந்தெடுத்த சார் 12 நாழியை நாலில் ஒரு பாகமாகக் காய்ச்சி எடுத்து, இதனுடன் தயிர் 4 படி, புளியாரைச்-சாறு, நெய் வகைக்கு இரண்டுபடி சேர்த்து, கற்கமாக, இந்துப்பு, அகத்திப்பூ, அதிவிடையம், ஓமம், சிறுமூலம், திரிகடுகு, இலவம், பிசின், வகைக்கு கழஞ்சாகச் சேர்த்து, காய்ச்சி, பதத்தில் வடிக்கும் நெய் இலந்தை நெய் ஆகும்.

தீரும் நோய்கள்: இந்நெய்யை உண்டிட பெண்களுக்கு புறப்புறப்பில் ஏற்படும் ரத்தப்போக்கு நீங்கும்.

## கண்டங்காரி கிருதம்

ஆற்றுமுள்ளிவேர், ஆடாதோடை, கீழாநெல்லி, செவ்வியம், வகைக்கு 5 பலம், தூதுவளை 12 பலம், நெருஞ்சி 6பலம், சிறுதேக்கு 3 1/8பலம், தேவதாரு, பொன் முசுட்டை, கொடிவேலி, திப்பிலிவேர், நாய்வேளை, வகைக்கு 5 பலம், இவைகட்கு நாலு பங்கு நீர் விட்டு, நான்கில் ஒரு பாகமாகக் குடிநீர் செய்து, இக்குடிநீருடன், நான்கில் ஒரு பாகமாக நெய் சேர்க்க வேண்டும். பிரமி, காக்கணம், கரிசாலை, இலைச்சாறு இவைகளை, நெய்க்கு இரண்டு விட்டு, கற்கமாக தூதுவளை, கண்டங்கத்திரிவேர் தோல், கற்கடக சிங்கி இவைகளை நெய்யுடன் கரைத்து,

கோட்டம், சிறுஅவரை விதை, எழிலம்பாலை, இவற்றை வகைக்கு மூன்று கழஞ்சாகக் கொண்டு சூரணம் செய்து, நெய்யில் தூவ வேண்டும்.

தீரும் நோய்கள்: கண்டங்காரி கிருதத்தை உண்டு வர வீக்கம், குன்மம், வயறுதல், பீலிகை, மூலம், சயம், சுவாச காசம் மற்றும் இதய நோய் நீங்கும்.

## புளியாரைக் கிருதம்

புளியாரை நீர் ஒரு நாழி, பசுநெய் ஒரு நாழி இவற்றுடன் கற்கமாக மரமஞ்சள், செவ்வியம், அகத்திப்பூ, மஞ்சள், அதிவிடையம், சுக்கு, வில்வப் பிஞ்சு, வலங்கத் தோல், வெட்டிவேர், சந்தனம், வெள்ளிலோத்திரம், தேவதாரு, முத்தம், செங்கழுநீர்க் கிழங்கு, பொன்முசுட்டை, கொடிவேலி, எவட்சாரம், வகைக்கு ஒரு கழஞ்சு சேர்த்து பதத்தில் எரித்தெடுத்த நெய் புளியாரை நெய்யாகும்.

தீரும் நோய்கள்: இந்நெய்யை அருந்த, கிராணி,முறைக்கழிச்சல் நீங்கும்.

## அதிலேகிய கிருதம்

முசுமுசுக்கை இலைச்சாறு பதக்கு, பால், நெய், வகைக்கு ஒரு குறுணி சேர்த்து, விலாம்பிச்சம், அதிமதுரம், இலுப்பைப் பூ, சந்தனம், திராட்சைக் கொடி, பற்பாடகம், லவங்கப் பத்திரி, வெட்டிவேர், கோட்டம், ஏலம், இலவங்கம், இவைகளை வகைக்கு ஒரு பலமாகக் எடுத்து கற்கமாக்கி நெய்யில் கரைத்து, காய்ச்சி, வடித்தெடுக்கும் நெய் அதிலேகிய கிருதம் எனப்படும்.

தீரும் நோய்: இந்நெய்யை உண்டுவர, பயித்தியம், தலைச்சுற்றல், கை காலெரிவு, கண்ணிலுள்ள நோய் தீர்வதுடன், தேகம் வன்மை அடையும்.

## கதகாதி கிருதம்

திரிகடுகு, திரிபலி வகைக்கு அரைபலம், இந்துப்பு கால் பலம், தேற்றான் விதை நான்கு பலம், நெய் ஒரு படி எடுத்துக் கொள்ள வேண்டும். தேற்றான் விதையை பால் விட்டரைத்து, நெய்யுடன் கலந்து, எரித்துப்பதத்தில் வடிக்க கதகாதி கிருதம் கிடைக்கும்.

தீரும் நோய்: இந்நெய்யை உண்ண, சயம் நீங்கும்.

## கதகாதி பூட்டி

ஊ தவளை பழம் விதை, தேற்றான் விதை, இவைகளை வகைக்கு நான்கு பலம், நெய் ஒரு படி, சர்க்கரை இரண்டு பலம், திரிகடுகு, சீரகம், சோம்பு வகைக்கு ஒரு பலம் எடுத்து, தேற்றான் விதையைப்பாலில் அரைத்து, மேற்படி நெய்யில் கரைத்துக் காய்ச்சி, வடிக்கும் நெய் கதகாதி பூட்டி ஆகும்.

தீரும் நோய்: இந்நெய்யை உண்டு வர சயம் நீங்கும்.

## ஆருத்திராதி கிருதம்

இஞ்சிச்சாறு பதக்கு, பால் நாழி, நெய்நாழி, எடுத்து பின் செவ்வியம், திப்பிலி, இந்துப்பு, யானைத்திப்பிலி, இம்பூறல் வேர், சீரகம், ஓமம், கொடிவேலி இவைகளை வகைக்கு ஒரு ழஞ்சாடி எடுத்து, சிறிது பாலுடன் அரைத்து, கற்கமாக, மேற்படி நெய்யுடன் கரைத்து, காய்ச்சி வடித்து எடுத்த நெய் ஆருத்திராதி கிருதமாகும்.

தீரும் நோய்: மார்பு நோய், பாண்டு, கிராணி, சயம் நீங்கும்.

## வாசாதி கிருதம்

ஆடாதோடை சூலச்சாறு, பசுவின் பால், வகைக்கு நாலு படி, நெய் இரண்டு படி சேர்த்து, இதில் கற்கமாகஇரண்டு தொடி திப்பிலி சேர்த்து, எவட்சாரம், சுக்கு, கொடிவேலி, யானைத் திப்பிலி, இந்துப்பு இவைகளை வகைக்கு அரை பலமாகக் கொண்டு, தூள் செய்து, நெய்யில் தூவி, காய்ச்சி எடுத்த நெய் வாசாதி கிருதமாகும்.

தீரும் நோய்கள்: காசம், ருசியின்மை, வல்லை, பாண்டு, சுரம், கிருமி நீங்கும். மேலும் சுவாச காசமும் நீங்கும், பசி உண்டாகும்.

## (வேறு) வாசாதி கிருதம்

ஆடாதோடை சூலம் இருபத்தி நாலு பலத்தில், பதக்கு நீர் விட்டு எட்டில் ஒரு பாகமாகக் காய்ச்சி, இறுத்த குடிநீரில், நெய், இரண்டுபடி சேர்த்து, திரிகடுகு, செவ்வியம், சடாமாஞ்சி, தேவதாரு, திரிபலை, நெருஞ்சிவேர், மஞ்சள், திராட்சைக் கொடி, இந்துப்பு, முத்தம், விளாளரிசி, சீரகம், பெருஞ்சீரகம், அமுக்கிராக்-கிழங்கு, கொடிவேலி, கடுக்காய் பூ, கோட்டம், கண்டுபாரங்கி, சர்க்கரை வகைக்கு மூன்று கழஞ்சு எடுத்து அரைத்து கற்கமாக மேற்படி நெய்யுடன் கலந்து வடித்தெடுக்கும் நெய் வாசாதி கிருதமாகும்.

தீரும் நோய்: காசம் நீங்கும்.

## சதாவேரி கிருதம்

அசுவகெந்தி, நிலப்பனைக் கிழங்கு, இலவம் பிசின் இவை வகைக்கு பதினைந்து பலம், இதற்கு நீர் நான்கு பங்கு சேர்த்து காய்ச்சி வடித்த குடிநீர் இரண்டு படியில், நெய், பால் வகைக்கு இரண்டு படி பூசனிக்காய் சாறு நாழி, சேர்த்து கற்கமாக, விலாம்பிச்சம், வெட்டிவேர், சடாமாஞ்சி சந்தனம், ஏலம், திரிபலை, சீரகம், அதிமதுரம், இலவங்கம், பேரீச்சு இவைகளை வகைக்கு ஒரு கட்டு அளவு சேர்த்துப் பின் கற்கண்டு எட்டு பலம் சேர்த்து காய்ச்சி வடிக்க சதாவேரி கிருதம் கிடைக்கும்.

தீரும் நோய்: கை, காலெரிவு, இரத்த பித்தம், பிரமேகம் போகும்.

## (வேறு) சதாவேரி கிருதம்

சதாவேரி சார், இஞ்சிச் சார், நெய், இவைகளை சமமாகக்கொண்டு, காய்ச்சிய கிருதம், சதாவேரி கிருதம் எனப்படும்.

தீரும் நோய்: பத்தியத்துடன் உண்ண, வாந்தி குன்மம் தீரும்.

## சரபிந்தாதி கிருதம்

வாய் விளங்கம், கோட்டம், அதிமதுரம், இஞ்சி இவைகளை ஊளாக்கி பசுவின் நெய்யில் சேர்த்து, மேலும் கரிசாலைச்சாறு, இரண்டு காசெடை, எருக்கம் பூ இரண்டு பணவிடை சேர்த்து காய்ச்சிய நெய் சதபிந்தாதி கிருதமாகும்.

தீரும் நோய்: இந்நெய்யை நசியமிட பீனிசம் போகும்.

## கூட்பாண்ட கிருதம்

பூசனிக்காய் நீர் நான்கு மரக்கால், நெய், பசுவின்பால், வகைக்கு குறுணி சேர்த்து, பின் சுக்கு, சிற்றரத்தை, முத்தக்காசு, சீரகம், சந்தனம், சிறுதேக்கு, ஏலம், இந்துப்பு, திப்பிலி வேர், விலாமிச்சம் வேர், அதிமதுரம், உத்தாமணி வேர், திரிபலை, பற்பாடகம், லவங்கப்பத்திரி, பாலை, வெட்டிவேர், தண்ணீர் விட்டான் கிழங்கு இவைகளை வகைக்கு ஒர்பலமாக பாலிலரைத்து, நெய்யுடன் கலந்து, கரும்புச்சாறு நான்குபடி விட்டு, எரித்து இறுத்த நெய் கூழ்ப்பாண்ட கிருதமாகும்.

தீரும் நோய்: உடல் இளைப்பு, குன்மம், பித்தம், சயம், வெப்பசுரம், மருந்திடு நீங்கும்.

## சம்பகண மாந்தக் கிருதம்

சீதேவி செங்கழுநீர், முஞுசுக்கை, திப்பிலி மூலம் இவைகளைப்-பிழிந்த சாறு, வகைக்கு குறுணி, நெய், பால் வகைக்கு குறுணி, ஏழு இளநீர், நீர் சதாவேரியின் சாறு நான்கு படி சேர்த்து கற்கமாக வெட்டி வேர், விலாமிச்சம் வேர், இலுப்பைப் பூ, வேலம், அதிமதுரம், கோட்டம், லவங்கம், பேரீந்து, முந்திரிப்பழம், சந்தனம், பற்பாடகம் இவை வகைக்கு பலம் ஒன்று எடுத்து பாலில் அரைத்து மேற்படி நெய்யுடன் கலந்து எரித்து இறக்கும் இந்நெய்யின் பெயர் சம்பகண மாந்தக் கிருதமாகும்.

தீரும் நோய்கள்: இந்நெய்யை உண்டு வந்தால், சயம், அத்திசுரம், பித்தம், கை காலெரிவு, உடல் இளைப்பு, காசம், தலைச்சுற்று, வாய்வு நீங்கும். உடல் வன்மை ஏற்படும்.

## பஞ்சகவ்விய கிருதம்

கோமூத்திரம், தயிர், நெய், சாணி நீர், பால் வகைக்கு நான்கு படி சேர்த்து, கற்கமாக, சதுரக்கள்ளி வேர், சிறு நாகப்பூ, திரிகடுகு, திப்பிலி, திரிபலை, இவைகளை வகைக்கு ஒரு பலமாகக்-கட்டி வடித்த நெய் பஞ்சகவ்விய நெய் எனப்படும்.

தீரும் நோய்: காமாலை, வெகுசோபை, பாண்டு, பெருவயிறு, உன்மாதம், மலக்கட்டு நீங்கும்.

## கதலிகந்த கிருதம்

வாழைக் கிழங்கு நீருடன், பசுவின்பால், நெய் வகைக்கு ஒரு குறுணி சேர்த்து கற்கமாக சந்தனம், மரமஞ்சள், திப்பிலி மூலம், முந்திரி ஏலம், இலவங்கம், நாகப்பூ, இலவங்கப்பட்டை (சாதுர்சாதம்) இவைகளை சேர்த்து, விளாவேர், அதிமதுரம், விலாமிச்சம் வேர், வெட்டி வேர், சீத விருட்சம் ஐந்து, வாழைக்கிழங்கு இவைகளை வகைக்கு ஓர் பலமாகக் கொண்டு, சூரணம் செய்து, மேற்படி நெய்யில் கலந்து எரித்தெடுத்த நெய் கதலிகந்த கிருதம் எனப்படும்.

தீரும் நோய்: மேகம், தலைச்சுற்று, மூத்திரக் கிரிச்சம், கை காலெரிவு, பித்தம் நீங்கும். பசியுண்டாகும். உடலுக்கு வன்மையை நல்கும்.

## மகா கல்யாண கிருதம்

பூசனிக்காய், வெள்ளரிக்காய், கரும்பு, வாழைக்கிழங்கு, அத்தி இலை, புளியாரை, ஆவாரை, இவைகளின் சாறு, இளநீர்

இவைகளுடன் தண்ணீர் விட்டான், முசுமுசுக்கை வேர், சீந்தில் கிழங்கு, ஆலவிழுது, நிலப்பனை, முத்தம், நன்னாரி, செங்கழுநீர் கிழங்கு, பேய்ப்புடல், பொன்னாங்காணி, முருங்கைப் பூ, தாமரை வளையம், நெய்தல், வெட்டிவேர், சிறு கீரை, சீந்தில் கொடி, செப்பு நெரிஞ்சி, விலாம்பிச்சம் வேர், தாமரை இலை, இவை சேர்ந்த குடிநீருடன் முன்சொன்ன சாறுகளும் கலந்து இதனுடன் பசுவின் நெய்யும் சேர்த்து எரிக்கும்போது கற்கமாக கோட்டம், அதிமதுரம், கொத்தமல்லி, பேரீச்சம், லவங்கப்பத்திரி, கூகைக் கிழங்கு மாவு, முந்திரி பழம், திப்பிலி, லவங்கப் பூ, வேலம் பிசின், சாதிக்காய், சீரகம், சோம்பு இவற்றை அரைத்து, நெய்யுடன் சேர்த்து எரித்து வடிக்கும் நெய் மகா கல்லியாண கிருதமாகும்.

<u>தீரும் நோய்</u>: இந்நெய்யை உண்டு வர மேகம், பித்தம் நீங்கும்.

(வேறு) <u>பஞ்சகவ்விய கிருதம்</u>

ஆவின்பால் மூன்று நாழி, தயிர் ஐந்து நாழி, பசுவின் நெய், நான்கு நாழி, சாணி நீர் இரண்டு நாழி, சீதேவி சாறு ஒரு நாழி, மேலும் வல்லாரை நீர் நான்கு நாழி, இளநீர் இரண்டு நாழி கொண்டு பின் குன்றிமணிவேர், அதிமதுரம், கோரோச்சனை, சந்தனம், செங்கழுநீர்க் கிழங்கு இவைகளை கூ ள் செய்து மேற்படி நெய்யுடன் கலந்து காய்ச்சி வடித்திறக்க பஞ்ச கிருதம் கிடைக்கும்.

<u>தீரும் நோய்</u>: கை, கால், நெஞ்சு எரிவு, நாக்கில் வெடிப்பு, வீக்கம், காமாலை, பித்தம், அத்திசுரம், சயம் முதலியவை நீங்கும்.

(வேறு) பஞ்ச கவ்விய கிருதம்

நெய், பால், தயிர், பசுவின் மூத்திரம், சாணி நீர் சேர்ந்த பஞ்ச கவ்வியத்தில், அதிமதுரம், திராட்சைக் கொடி, வாய்விளங்கம், வசம்பு, ஏலம், மரமஞ்சள், கடுகு ரோகிணி, திரிபலைகள், மஞ்சள், கொடிவேலி, மஞ்சிட்டி, முத்தம், வெட்பாலை அரிசி, வட்டத்திருப்பி, நன்னாரி, நெட்டிலை, ஆடாதோடை, இவைகளை வகைக்கு ஒரு கழஞ்சு வீதம் எடுத்து பொடியாக்கி,போட்டு,எரித்து இறக்கும் நெய் பஞ்ச கவ்விய கிருதமாகும்.

தீரும் நோய்: இந் நெய்யை அருந்தி வர, பாவம் நீங்கு, பிள்ளை உண்டாகும். அழகும் செல்வமும் உண்டாகும். நோய் செய்கிற பூத கிரகங்கள் நீங்கும். நூறு வயது வரை வாழ்வர்.

சட்பல கிருதம்

சுக்கு, திப்பிலி, திப்பிலி மூலம், செவ்வியம், சித்திர மூலம் (பஞ்ச கோலம்) சேர்ந்த சூரணத்தில், பசுவின் பால் ஒரு படி, நெய் ஆறு பலம் விட்டு, பால் சுண்டு மட்டும் எரித்து, காய்ச்சி, இறுத்த நெய் சட்பல கிருதம் எனப்படும்.

தீரும் நோய்: இந் நெய்யை அளவாகக் கொண்டு வர, சுவிசை, பாண்டு, அக்னி மந்தம், காசம்,எட்டு வகை குன்மம், சூலை முதலியன நீங்கும்.

## குக்குல கிருதம்

வேப்பந்தோல், சீந்தி, கண்டங்கத்திரி வேர், பேய்ப்புடல், ஆடா தோடையிலை, பறங்கி, இவைகளை சம அளவாகக் கொண்டு பதக்கு நீரிலிட்டு, காய்ச்சிய குடிநீர் நான்கு படியில், கற்கமாக விளாளரிசி, இந்துப்பு, சதகுப்பை, செவ்வியம், மஞ்சள், கொடிவேலி, எவட்சாரம், வெட்பாலை அரிசி, வசம்பு, ஓமம், சிவதை வேர், சுக்கு, கோட்டம், அதிவிடையம், கடுகு ரோகிணி, மஞ்சட்டி, சீரகம், பொன்முசுட்டை, தேவதாரு, யானைத் திப்பிலி, பாலை வேர் இவைகள் வகைக்கு ஓர் கழஞ்சு, குங்கிலியம், பதினெட்டு கழஞ்சு சேர்த்து, சிறு நெய்விட்டு அரைத்து, ஒரு படி நெய்யில் கரைத்து, தயாரித்துள்ள குடிநீரையும் சேர்த்து தீயில் எரித்து வடித்தெடுக்கும் நெய் குக்குல கிருதம் எனப்படும்.

தீரும் நோய்: சிலந்தி, தோல் எலும்பில் உண்டாகும் விப்புருதி, குட்டம், சீழ் , சிரங்கு முதலியன போகும்.

## அசுவகந்தாதி கிருதம்

அமுக்கிராக் கிழங்கு நான்கு பலம், வெட்டி வேர், விலாமிச்சம் வேர், மல்லி வேர், நன்னாரி, தண்ணீர்விட்டான் கிழங்கு, பேராமுட்டி, வாழைக்கிழங்கு, நெரிஞ்சி வேர், இவை வகைக்கு ஒரு பலம் எடுத்து நீரில் போட்டு, வடித்த குடிநீர் பதக்கில், நெய், பால் வகைக்கு ஒருபடியாக விட்டு, கொத்தமல்லி, சிறுதேக்கு, கச்சோலம், செவ்வள்ளிக் கொடி, திரிகடுகு, சடாமாஞ்சி, சாதிச்சாதம், சரள தேவதாரு,

கடுகு ரோகிணி, முதலியவை சேர்ந்த சூரணத்தை, மேற்சொன்ன நெய்யில் ஆவி, பதமாய்க் காய்ச்சி வடித்து எடுக்கும் நெய் அசுவகெந்தாதி கிருதம் எனப்படும்.

தீரும் நோய்கள்: இந்நெய்யை உண்டு வர நவசுரங்கள், தீராத விடப்-பாண்டு, கப சுரம், காசம், மேலிளைப்பு, விடமச் சுரங்கள், சோர்வினை உண்டாக்கும் சுவாசம் நீங்கும்.

## திப்பிலியாதி கிருதம்

ஆ தவளை, கண்டங்கத்திரி, துளசி, வில்வம், நன்னாரி, ஆதளை, செந்தொட்டி, அதிமதுரம், குமிழ், சிற்றாமுட்டி, பேராமுட்டி, நெரிஞ்சி, ஆடாதோடை, இவைகட்கு பத்து பங்கு நீர் சேர்த்து குறுகியாய் வடித்த குடிநீரில் நெய் ஒரு படி, பால் மூன்று படி விட்டு, பழைய வெல்லம் இருபது பலம் சேர்த்து, மேலும் கற்கமாக கண்டங்-கத்திரி, சுக்கு வகைக்கு ஐந்து பலம், சிறுதேக்கு பலம் மூன்று அதிமதுரம் மூன்று பலம், அரத்தை இரண்டு பலம், சீரகம், சோம்பு, பலமிரண்டு, திப்பிலி மூலம், சடாமாஞ்சி வகைக்கு அரைப் பலம், மஞ்சட்டி, கருஞ்சீரகம், வகைக்கு ஒரு பலம், திரிபலை, கடுக்காய் பூ, சீரகம், கோட்டம், முந்திரி, பேரீந்து, கொத்தமல்லி, இவை வகைக்கு ஓர்பலம் சேர்த்த சூரணத்தை, சிறிது சி[illegible]க நெய்யில்விட்டு, கிளறி, தேன் ஒன்றரை படி சேர்த்து எரித்த [illegible]ந்த நெய் திப்பிலியாதி கிருதமாகும்.

தீரும் நோய்: இந்நெய்யை உண்டு வர சயம் நீங்கும்.

(வேறு) திப்பிலியாதி கிருதம்

முள்ளி, குமிழ்வேர், சிற்றாமுட்டி, கண்டங்கத்திரிவேர், சிறுகாஞ்சொறி வேர், சிறுநெருஞ்சி, வில்வம், நாவளை, ஆடாதோடை, பாதிரி வேர், வகைக்கு நான்கு பலத்துடன் நீர் விட்டு குறுணி அளவு காய்ச்சிய குடிநீருடன், நெய், பால, தேங்காய் நீர், தேங்காய் பால், வகைக்கு குறுணி விட்டு, பின் கற்கமாக, திப்பிலி, ஏலம், கடுக்காய் பூ, அதிவிடையம், அதிமதுரம், செவ்வியம், சடாமாஞ்சி, அரத்தை, இலவங்கப்-பத்திரி, சிறுதேக்கு, திப்பிலி மூலம், சீரகம், சோம்பு, திரிகடுகு, கண்டங்கத்திரி, திரிபலை இவைகள் வகைக்கு ஒரு பலம், கற்கண்டு ஒரு படி, இவைகளை எல்லாம் மேற்படி நெய்யுடன் இட்டு காய்ச்சி வடித்தெடுக்கும் நெய், திப்பிலியாதி கிருதமாகும்.

தீரும் நோய்: இந்நெய்யை உண்டு வர, சயம், சுவையின்மை, எலும்பைப் பற்றிய சுரம் நீங்கும்.

கதகாதி கிருதம்

தேற்றான் விதை, சர்க்கரை வகைக்கு இரண்டு பலம், நாவளை, பழ பசுவின்பால், நெய் வகைக்கு இரண்டுபடி எடுத்துக் கொண்டு, தேற்றான் விதை, நாவளை பழம் இவற்றுடன் சாதிக்காய், திப்பிலி, மிளகு, சீரகம், சோம்பு இவை வகைக்கு அரை பலம்எடுத்து பாலிலரைத்து மேற்படி நெய்யில் கலந்து எரித்து வடித்த நெய் கதகாதி கிருதம் எனப்படும்.

தீரும் நோய்: இந்நெய்யால் காசம், சயம், என்பு சுரம் நீங்கும்.

(வேறு) ஆருத்திராதி கிருதம்

இஞ்சி, முசுமுசுக்கைச் சாறு, அரித்தை, கோட்டம், வகைக்கு ஒரு படி கொண்டு இதில் அதிமதுரம், திப்பிலி மூலம் வகைக்கு ஒரு பலம் சீரகம், சோம்பு இரண்டு பலம் சேர்ந்த சூரணத்தை சேர்த்து காய்ச்சி வடித்தெடுத்த நெய் ஆருத்திராதி கிருதம் எனப்படும்.

தீரும் நோய்: இந்நெய்யை உண்டு வர, வீக்கம், இதயநோய், வாந்தி போகும்.

லட்சுமி கிருதம்

தாளி இலையை சிறு தேங்காயளவு அரைத்து எடுத்துக்கொண்டு இதனுடன் பால், நெய், வகைக்கு படி விட்டு எரித்து காய்ச்சி இறக்கி இறுத்த நெய் லட்சுமி கிருதம் எனப்படும்.

தீரும் நோய்: லட்சுமி கிருதத்தை உண்டு வர, அத்தி சுரம் நீங்கும்.

நயன சஞ்சீவி கிருதம்

பசுவின்பால், நெய், வகைக்கு ஒரு படியுடன், மதுரம், கோட்டம், ஏலம், செண்பகப்பூ, வெட்டி வேர், பொன்னாங்காணி வேர், விலாமிச்சம் வேர், அக்கிரகாரம், சிறுகீரை வேர் இவை வகைக்கு நான்கு பலம் சேர்த்து செய்த நெய் நயன சஞ்சீவி கிருதம் எனப்படும்.

தீரும் நோய்: தலைமுழுக, கண்ணில் உண்டாகும் படலம் காசம் மற்ற தொண்ணூற்றாறு நோய்களும் நீங்கும். நூறு வயது வரை கண்பார்வை நன்றாக இருக்கும்.

(வேறு) ஆருத்திராதி கிருதம்

இஞ்சி, முஞுசுக்கைச் சாறு, அரித்தை, கோட்டம், வகைக்கு ஒரு படி கொண்டு இதில் அதிமதுரம், திப்பிலி மூலம் வகைக்கு ஒரு பலம் சீரகம், சோம்பு இரண்டு பலம் சேர்ந்த சூரணத்தை சேர்த்து காய்ச்சி வடித்தெடுத்த நெய் ஆருத்திராதி கிருதம் எனப்படும்.

தீரும் நோய்: இந்நெய்யை உண்டு வர, வீக்கம், இதயநோய், வாந்தி போகும்.

லட்சுமி கிருதம்

தாளி இலையை சிறு தேங்காயளவு அரைத்து எடுத்துக்கொண்டு இதனுடன் பால், நெய், வகைக்கு படி விட்டு எரித்து காய்ச்சி இறக்கி இறுத்த நெய் லட்சுமி கிருதம் எனப்படும்.

தீரும் நோய்: லட்சுமி கிருதத்தை உண்டு வர, அத்தி சுரம் நீங்கும்.

நயன சஞ்சீவி கிருதம்

பசுவின்பால், நெய், வகைக்கு ஒரு படியுடன், மதுரம், கோட்டம், ஏலம், செண்பகப்பூ, வெட்டி வேர், பொன்னாங்காணி வேர், விலாமிச்சம் வேர், அக்கிரகாரம், சிறுகீரை வேர் இவை வகைக்கு நான்கு பலம் சேர்த்து செய்த நெய் நயன சஞ்சீவி கிருதம் எனப்படும்.

தீரும் நோய்: தலைமுழுக, கண்ணில் உண்டாகும் படலம், காசம் மற்ற தொண்ணூற்றாறு நோய்களும் நீங்கும். நூறு வயது வரை கண்பார்வை நன்றாக இருக்கும்.

துணைநூற் பட்டியல்

குணபாடம் (மூலிகை வகுப்பு), வைத்திய இரத்தினம், க.ச. முருகேச முதலியார், மூன்றாம் பதிப்பு, 1969, தமிழக அரசு வெளியீடு

குணபாடம் (தாது. சீவ வகுப்பு), டாக்டர் ஆர். தியாகராசன், 2ம் பதிப்பு 1968, தமிழ்நாடு அரசினர் வெளியீடு.

சித்த மருத்துவாங்கச் சுருக்கம், டாக்டர் க.சு. உத்தமராயன் 2ம் வகுப்பு, 1983, தமிழ் நாடு அரசு.

சித்த மருத்துவ நோய்நாடல் நோய்முதனாடல் திரட்டு. இரண்டாம் பாகம்) டாக்டர் ம. சண்முகவேலு 1967, தமிழக அரசு.

தன்வந்திரி குழந்தை வாகடம், க. லலிதாம்பிகா, உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், 1984, சென்னை.

தமிழ் லெக்சிகன், சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை, 1984 இரண்டாம் பதிப்பு.

## பழைய அளவு முறைகளும் - சம அளவுகளும்

| | | |
|---|---|---|
| கரண்டி நிறை | - | 1 பொட்டுக் கரண்டி |
| கழஞ்சு | - | 40 குன்றி - 4.4 கிராம் |
| காசெடை | - | ஒரு பைசா அளவு (கழஞ்சு எடையே) |
| கால்படி (உழக்கு) | - | 336 மி.லிட். |
| குன்றி எடை | - | 780 மி.கிராம் |
| சிறு பயறு அளவு | - | ½ குன்றி - 65 மி.கிராம் |
| சுண்டைக்காயளவு | - | சுமார் 3 குன்றி - 390 மி.கிராம் |
| சிட்டெடை | - | 1/48 தோலா - 25 மி.கிராம் |
| படி | - | 1.344 லிட்டர் |
| பணவெடை | - | 488 மி.கிராம் |
| பயிறளவு | - | ½குன்றி - 65 மி.கிராம் |
| பலம் | - | 35 கிராம் |
| பாக்களவு | - | 1/16 பலம், 2.20 கிராம் |
| வராகன் எடை | - | 3.5 கிராம் |
| வீசை | - | 1.4 கி.கிராம் |

**நிறுத்தல்:**

நிகழ்கால இரச, உபரச, பாஷாண முதலியவைகளின் அளவை:

| | | |
|---|---|---|
| 32 குன்றி | - | 1 வராகனடை |
| 10 வராகனெடை | - | 1 பலம் |
| 8 பலம் | - | 1 சேர் (கச்சா) |
| 5 சேர் (40 பலம்) | - | 1 வீசை |
| 50 பலம் | - | 1 துலாம் |
| 2 துலாம் | - | 1 பாரம் |

குறிப்பு:

| | | |
|---|---|---|
| 1 1/7 | - | 1 குன்றி |
| 180 கிராம் | - | 1 தோலா |
| 2½ தோலா | - | 1 (அவுன்ஸ்) |
| 437.5 கிராம் | - | 1 02 |
| 8 குன்றி | - | 1 மாஉஷா (15கிராம்) |
| 12 மாஉஷா | - | 1 தோலா (180 கிராம்) |

சென்னை, செங்கற்பட்டு முதலிய இடங்களில் வழங்கும் முகத்தல் அளவை:

| | | |
|---|---|---|
| 360 நெல் | - | 1 செவுடு |
| 5 செவுடு | - | 1 ஆழாக்கு |
| 2 ஆழாக்கு | - | 1 உழக்கு |
| 2 உழக்கு | - | 1 உரி (அரை நாழி) |
| 2 உரி | - | 1 நாழி (படி) |
| 8 நாழி | - | 1 மரக்கால் (குறுணி) |
| 2 மரக்கால் | - | 1 பதக்கு |
| 4 மரக்கால் | - | 1 தூணி ( 2 பதக்கு ) |
| 5 மரக்கால் | - | 1 பறை |
| 12 மரக்கால் | - | 1 கலம் ( 3 தூணி ) |
| 400 மரக்கால் | - | 1 கரிசை (80 பறை, 33 கலம்) |

குறிப்பு:

| | | |
|---|---|---|
| 2½ ஆழாக்கு | - | 1 பயின்ட் |
| 3½ ஆழாக்கு | - | 1 புட்டி |
| 20 ஆழாக்கு | - | 1 காலன் |
| 6 காலன் | - | 1 டின் |

வேறு:

| | | |
|---|---|---|
| முந்நூற்றிருபது குன்றியெடை | - | 1 பலம் |
| 25 பலம் | - | 1 நாழி |
| எட்டு நாழி | - | 1 குறுணி. |

## பாடல் முதற் குறிப்பு அகராதி

# சொல்லடைவு

## நோய்கள்

# சொல்லடைவு

## தாவர வர்க்கம்

## சொல்லடைவு

## தாது வர்க்கம்

## சொல்லடைவு

## உயிர் வர்க்கம்

ஆவின் பால் - 144,184,186,209,213,231,262,268

ஒட்டைத்தா ளி - 73

கலன்கொம்பு - 94

சிளிஞ்சியினுள்ளிருக்கும் சதை - 143

கோசலத்தில் - 110,111, 217

கோரோசனை - 232

தயிர் - 171,218,231

தேன் - 19,48,58,96,122,138,256

நெய் - 147,209,144,213,268,218

வெள்ளாட்டினோர் மூத்திரத்தில் - 112, 113

ஆவாரை

சொல்லுதற்கு மட்டோ தொலையாத மேகநீ
ரெல்லா மொழிக்கு மொறிவகற்ற - மெல்லவச
மாவரைப். பம்பரம்போ லாட்டுந் தொழிலணைக்கே!
யாவாரை ருவ் பதம்.

ஈச்சர முனி

பலபலவிக் கஞ்சந்தி பாதங்க ளோடு
நலமகல்வி உடங்கள் நடுக்கும் - கலகலெனப்
பேச்சரமுண் டாடுமலர்ப்-பெண்ணமே நீகேளாய் !
ஈச்சர முனிதனக் கீற

## ஓரிதழ் தாமரை

தாதவையுண்டாக்குந் தனிமேகத்தைத் தொலைக்கும்
ஆதரவா மேனிக் கழகுதருஞ் - சீதம்போம்
சீரிதழ்த் தாமரைவாழ் செய்ய மடவனமே
ஓரிதழ்த் தாமரையை யுள்.

## கரிசாலை

குரற்கம்மற் காமாலை குட்டமொடு சோபை
யூறற்பாண்டு பல்லோ வொழியு - நிறற்சொல்ல
மெய்யாந் தகரையொத்த மிஞல்லு நற்புலத்தைக்
கையாந் தகரை யொத்தக் கால்.

# கரிசணாங்கண்ணி



குரோசாணி ஓமம்

வெகுமூத் திரம்வாதம் வீங்க நட் டம்புண்
உருபேதி யுட்கடுப்பு ளோடே - மிகுகரப்பான்
தீராக் கபமிவை போம் செய்யகுரோ சாணியென்றால்
வாரா மயக்கமுறு மால்.

## சங்கு

வீக்கம் சுரப்பால் விதாகம் கிரந்தி குன்மம்
ஐங்கயிரு மூலவாய் வோடு பித்தர் - தாக்குண்டம்
விறமோ கன்தலக்கும் வீசுபசி ரத்த முண்டாம்
கூறசங்கம் வெண்மை கட்கு.

# சங்கன்



குமரி (அ) சோற்றுக் கற்றாழை

பொல்லாமே சங்கபம்பு முச்சூலை குஉக்டரச
மல்லார்மத் தம்பகந்த ரங்குன்ம - மெல்லாமீஷ்
டேகு மாக்கு மொச்சற் கிரிச்சரமு
மாகு மாக்கு மருந்து.



குமரி (என்ற) சோற்றுக்கற்ருழை

### முசுமுசுக்கை

இருமலுட னீளை யிரைப்பு புகைச்சல்
மருவுகின்ற நீர்த்தோம் மாறுந் - திருவுடைய
மானே! முசுமுசுக்கை மாமூலி யவ்விலையைத்
தானே யிருந்தவர்க்குந் தாள்.



முசுமுசுக்கை
(இருகுரங்கின்கை)

வல்லாரை

அக்கர நோய்மாறும் அகலும் வயிற்றிரிவு
தக்கவிரத் தக்கருப்புத் தாவேகும் - பக்கத்தில்
எல்லாரை · யுமருந்தெல் றேறரைத்து நல்மனையுள்
வல்லாரை ஐவளர்த்து வை.



வல்லாரை

## வாத நாராயணன்

நன்மை தரும்வாத நாராயண மரத்தின்

தன்மை இன்னுரைக்கின் தாழ்குடிலே - வன்மையுறும்

வாத வலிதுடைச்சல் வாட்டுகளைச் சூலையெலாம்

புதலத்தில் விட்டோடிப் போம்.

